# கல்கி

ஸ்பீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



சகலகலா தோனி!

KALKI ● 23.11.2008 ● ரூ.10.00 ● 96 பக்கங்கள்



பூ பூக்கும் ஓசை!

-இயக்குநர் சசி



"காங்கிரஸ்-தி.மு.க கண்டிப்பாகத் தோற்கும்!"

-தா:பாண்டியன்




காலில சக்கரம் கட்டியாச்சு!
கைகுலுக்கப் புறப்பட்டாச்சு...

* எல்லாரையும் காலி பண்ணும் இவள் ஒரு ஸ்டைல் சுனாமி!

* இவன மாதிரி ஒருத்தன் கெடச்சா நம்பி 'லவ்' பண்ணலாம்.

* இவ ஒருத்தி கால வைச்சா போதும் 'பளபள'ன்னு ஆயிடும் பாலிடிக்ஸ்.

* தட்டிக்கேட்கும் தில்லான அவன்தான் அக்மார்க் ஆம்பிள!

இப்படி யாராவது உண்டா பாரு! உங்க காலேஜ்ல யாரு?
அவங்களப் பத்திக் கொஞ்சம் கூறு...

# கல்கியின் காலேஜ் விசிட்!

அடுத்த வாரம் ஃபுல் டீடெய்ல்ஸ்...

இது எங்க ஏரியா!



னார்.

விறுவிறுவென்று கதை சொல்லும் ஆற்றல் வேண்டும் - கதைக்குள் கதைக்குள் கதை என்று போய் பிரமிப் பூட்டி, கணத்தில் விட்ட இடத்துக்கு வந்து தொடர்வார் எம்பார்.

ஹரிகதையின் தாய்நில மான மஹாராஷ்டிரத்தின் மொழியுடன், தெலுங்கு, கன்னட, சம்ஸ்கிருத, தமிழ் மொழிகளிலும் புலமை வேண்டும்.

-ஆச்சர்யமான வகையில் இவற்றில் தேர்ந்தவர் எம்பார்.

ஓரளவேனும் நடிப்புத் திறன் வேண்டும்; உணர்ச்சி பாவம் காட்டத் தெரிய வேண்டும் -

இந்த ஆற்றல்களைக் குறைவின்றிப் பெற்றிருந்த வர், சதிலீலாவதி என்ற நாட கத்தில் பெண் வேடமிட்டு தத்ரூபமாக நடித்தும் இருக் கிறார்; ஹரிகதை நிகழ்ச்சி

# ராமானுஜர் அளித்த

ஹரிகதை என்கிற அற்புதமான கலைவடிவத்துக்கு முக்கியப் பங்களித்தவர் களுள் ஒருவர் எம்பார் விஜயராகவாச்சார் யார்.

ஹரிகதை நிகழ்த்த நல்ல சங்கீத ஞானம் வேண்டும் - எம்பார் தமது நிகழ்ச்சிகளில் மிக அழகாகப் பாடியதோடு, பல புதுப்புது ராகங்களையும் அறிமுகப்படுத்

கல்யாணபுரம் ஆர். ஆராவமுதன்

களில் காலில் சதங்கை கட்டிக்கொண்டு ஆடியும் மகிழ்வித்திருக்கிறார்.

இவ்வளவு திறமைகளும் இருந்தாலும், குருபக்தி, தெய்வபக்தி, இதய சுத்தம் இல்லாவிட்டால் ஹரிகதை நிகழ்ச்சி பிரகாசிக்காது.

- எம்பாரின் நிகழ்ச்சிகள் சொக்கத் தங்க மாகப் பிரகாசிக் கக் காரணம்

# எம்பார் நூற்றாண்டு

அவர் தமது குருவான மஹாமஹோபாத்யாய தண்டபாணி தீக்ஷிதரிடமும், இசையாசிரியரான சிதம்பரம் சுந்தரம் பிள்ளையிடமும் கொண்டிருந்த ஈடுபாடு.

**எ**ம்பார் என்ற பெயரே ஆசார்ய (குரு) பக்தியைக் குறிப்பதுதான்! ஸ்ரீமத் ராமானுஜரின் சிறிய தாயாருடைய பிள்ளை கோவிந்தன். இவர் ராமானுஜரின் சீடரானார். தமது பட்டப் பெயரான எம்பெருமானார் என்பதையே சுருக்கி 'எம்பார்' என்ற பட்டத்தை கோவிந்தனுக்கு அளித்தார்

## குடும்பச் சொத்தாகப் பெற்ற ஹரிக்கதை ஆற்றலை, தம் உழைப்பால் வளர்த்துக் கொண்டார் எம்பர் விஜயராகவாச்சார்யார்

ராமானுஜர். இந்த எம்பார் வம்சத்தில் தோன்றியவரே விஜயராகவாச்சார்யார். சிதம்பரம் இவர் பிறந்த ஊர். இவரது தாத்தா, கோபாலகிருஷ்ண பாரதியின் சம காலத்தவர் - பெரிய படிப்பாளி, பாரதியுடன் நட்பு பூண்டவர். விஜயராகவாச்சாரியாரின் தந்தை ஸ்ரீரங்காச்சார்யாரும் சிறந்த ஹரிகதை விற்பன்னர்.

பட்டம்!

குடும்பச் சொத்தாகப் பெற்ற ஹரிகதை ஆற்றலை, தம் உழைப்பால் வளர்த்துக் கொண்ட எம்பார் விஜயராகவாச்சார்யார், பாமரர் விரும்ப கதை சொல்லி, பண்டிதரும் போற்ற வாழ்ந்தார். காஞ்சி பரமாச்சார்யாரும் இவரை கௌரவித்தார்; மியூசிக் அகாடமியும் இவருக்குச் சங்கீத கலாநிதி பட்டம் வழங்கியது.

பல நற்பணிகளுக்கு உதவிய எம்பாரின் நூற்றாண்டு இது. (24.11.2008 - 24.11.2009) மாதம் ஒரு ஊரில் இவர் நினைவைப் போற்றும் வகையில் நிகழ்ச்சிகள் திட்டமிடப்பட்டுள்ளன. நிறைவு நிகழ்ச்சி சென்னையில்தான் - நாரதகான சபாவில்.




கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர்: சீதா ரவி
உதவி ஆசிரியர்: கதிர்பாரதி
வடிவமைப்பு:
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
ச.கார்த்திகேயன்

தொலைபேசி:
044 - 4343 8888 (30 lines)
தொலைநகல்: 044 - 4343 8899
மின்னஞ்சல் - ஆசிரியர் குழு:
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு:
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு:
subscription@kalkiweekly.com
பிற தகவல்கள்:
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி:
www.kalkionline.com
சந்தா விவரம் - உள்நாடு:
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-
வெளிநாடு (விமானத்தபால்):
ஒரு வருடம் : ரூ. 3,800/-

Bharathan Publications Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# நீங்கள் கேட்டவை



● மு.ரா.பாலாஜி, கோலார்

? ''வேலூர் சிறையில் போய் நளினியை எதற்காகச் சந்தித்தார் ப்ரியங்கா என்று கேள்வி எழுப்பவில்லை; அமீர் - சீமானை மட்டும் தண்டித்தே ஆக வேண்டும் என்று தமிழக காங்கிரஸ்காரர்கள் ஆவேசம் கொள்வானேன்?'' என்று சரத்குமார் கேட்கிறாரே?

! நியாயமான கேள்விதான். ஆனால், அமீர் - சீமானின் பேச்சையோ வைகோவின் நிலைப்பாட்டையோ, நளினி-ப்ரியங்கா சந்திப்பு நியாயப்படுத்திவிடாது. தெரியாத்தனத்துக்கும் தேசத் துரோகத்துக்கும் வித்தியாசம் உண்டு.

● என். பாலகிருஷ்ணன், மதுரை

? ''எனக்கு அளிக்கப்பட்ட 'இசட் பிளஸ்' பாதுகாப்பை மஹாராஷ்டிர அரசு வாபஸ் பெற்றது முட்டாள்தனமான செயல்'' என்கிறாரே ராஜ் தாக்கரே?

! அவரைப் போல் எல்லா தலைவர்களும் ஆத்திரத்தைத் தூண்டுகிற விதத்தில் பேசிவிட்டு, பாதுகாப்பும் கேட்க ஆரம்பித்தால் என்ன ஆவது? தலைவர்களின் அகம்பாவம் பிளஸ் ஆவதற்காக, பாதுகாப்பை பிளஸ் ஆக்கிக்கொண்டே போக முடியுமா?! அரசியலுக்குப் பாதுகாப்பு தரலாம். அராஜகத்துக்குத் தர முடியாது; கூடாது.

● ஆர்.ராஜதுரை, சீர்காழி

? ஒபாமா ஆலோசகர்களில் ஒருவராக சோனல் ஷா என்ற இந்தியப் பெண் நியமிக்கப்பட்டுள்ளது பற்றி...?

! இந்தியாவுக்குப் பெருமை; இந்தியப் பெண் குலத்துக்குக் கூடுதல் பெருமை. ஆற்றல் என்று கணிக்கும்போது, இன வேற்றுமை, பிரதேசப் பித்து போன்றவை குறுக்கிடுவதில்லை என்பது அமெரிக்காவுக்கு உள்ள பெருமை.

● கே.துரைசாமி, மங்களப்பட்டி

? அமெரிக்கத் தேர்தல் முடிவுகள் நம் நாட்டின் மீது தாக்கத்தை ஏற்படுத்துமா?

! புதிய அமெரிக்க அரசின் கொள்கை மாற்றத்தைப் பொறுத்து, நம் பொருளாதார, ராணுவ, அயலுறவுத் துறைகள் பாதிப்புக்குள்ளாகும். 'அவுட் ஸோர்ஸிங்கைக் குறைக்கச் செய்வேன்' என்று ஒபாமா தமது வாக்காளர்களுக்கு வாக்குறுதி அளித்தது ஞாபகமிருக்கா?

● ஏ.பக்ருதீன், சேலம் - 7

? காவிரி நீரைத் தமிழகத்துக்குத் தரக்கூடாது என்று கன்னட நடிகர் சங்கம் போராடிய போது, அதில் கலந்துகொண்டு தமிழர்களைச் சாடிய சரோஜா தேவிக்கு தமிழக முதல்வர் அண்மையில் விருது கொடுத்தது, தமிழுணர்வுகளை மதிக்காத செயலல்லவா?

! இந்த இடத்திலாவது அரசியலையும் சினிமாவையும் கலக்காமல் பிரித்துப் பார்த்ததற்காகப் பாராட்டுங்க ஸார்! □

## சிரஞ்சீவி ஆந்திர

● எஸ்.ஜெயலட்சுமி, கும்பகோணம்

? அயல்நாடுகளிலெல்லாம் உபயோகிக்




* பாதிக்கும் வாக்குறுதி

க்க் கூடாது என்று தடை போட்ட அஜினோமோட்டோவின் விளம்பரம் இங்கே கலக்குகிறதே! நம் நாட்டில் உள்ள மக்களை இது பாதிக்காதா?

! உங்கள் கேள்வியை அப்படியே அமைச்சர் அன்புமணிக்கு அனுப்பி வைக்கிறோம். மக்களுடைய உடல் நலத்தில் மிகுந்த கவனம் செலுத்தும் அவர், அஜினோமோட்டோ பற்றிய உங்கள் அச்சத்தைப் போக்குவார் என்று எதிர்பார்க்கிறோம். தடாவா, தாராளமா என்பதைத் தீர்மானிக்கட்டும்!



* கூடுதல் பெருமை

● **எஸ்.பக்கிரிசாமி, திருவாரூர்**

**? ''கன்னடம், தெலுங்கு செம்மொழிகளாக அறிவிக்கப்பட்டுள்ளது தமிழைக் கொச்சைப்படுத்தும் செயல்'' என்று திருமாவளவன் கூறியுள்ளது பற்றி...?**

! தமிழ் இதனால் ஒன்றும் கொச்சைப்பட்டுவிடாது. பிராந்திய உணர்வுகளுக்கு அஞ்சி எல்லா மொழிகளையும் செம்மொழி, செம்மொழி என்று அறிவித்துக்கொண்டே போகும் நிர்ப்பந்தத்துக்கு உள்ளாகியிருக்கும் அரசுதான் கொச்சைப்படுகிறது.

● **வரதராஜன், மேற்கு மாம்பலம்**

**? உங்கள் பதிலுக்கு, பதில் சொல்வதாக நினைத்து, முரசொலியின் அநாகரிக சாடலைப் பார்த்தீர்களா?**

! ரூபாய் நோட்டில் காந்திஜி படம் போடுவதையும், ரேஷன் கடைப் பொருட்களின் பாக்கெட்டில் ஒரு முதல்வரின் படத்தைப் போடுவதையும் ஒப்புநோக்க முடியாது. மக்களின் வரிப்பணத்தைச் செலவழித்து ஆட்சியில் உள்ள தனி நபருக்கோ கட்சிக்கோ விளம்பரம் தேடிக் கொள்வதைத்தான் தராசுவின் பதில் சற்று காரமாகவே இடித்துக் காட்டியது. இதுகூட புரியாமல் (வி)காரமாக, ஆனால் சாரமின்றிப் பதில் சொல்லியிருக்கும் முரசொலியின் தரம், நிறம், மணம், குணம் குறித்து நான் எதுவும் சொல்லத் தேவையில்லை.

● **இரா. சாந்தகுமார், சென்னை - 49**

**? தம்மை ஆந்திராவின் ஒபாமா என்று வர்ணித்துக் கொள்கிறாரே சிரஞ்சீவி...?**

! சிரஞ்சீவி ஜோக்!

● **எஸ். ராமசாமி, வடக்கு தயிர்பாளையம்**

**? வட மாநிலத்தவரை எதிர்க்கும் ராஜ் தாக்கரேயின் தலையை வெட்டி எடுத்து வருபவருக்கு ஒரு கோடி ரூபாய் பரிசு தருவதாகச் சொல்கிறாரே சமாஜ்வாதி கட்சி சட்டமன்ற உறுப்பினர்**



★ எச்சரிக்கை மணி!



★ அகம்பாவம் பிளஸ்!



★ வேலூர் வாதம்!



★ காலமும் கோலமும்!

பெற்ற இளைஞர்களைக் காவு கொடுத்துக்கொண்டிருக்கிறார்கள்.

● அகிலா அன்புமணி, ஈரோடு

**? தீ விபத்துக்குள்ளான சரவணா ஸ்டோர் கட்டடத்துக்கு எந்தத் துறையிலும் அனுமதி பெறப்படவில்லை என்று சென்னைப் பெருநகர வளர்ச்சிக் குழும உயரதிகாரி தெரிவித்துள்ளாரே?**

! அடேயப்பா! அவ்வளவு உயரமான கட்டடம் கட்டி, வருஷக்கணக்காக வியாபாரம் செய்தது வரை எதுவுமே தெரியாது, மாநகராட்சிக்கும் பெருநகர வளர்ச்சிக் குழுமத்துக்கும்! என்ன ஒரு தூக்கம்?! 'வைட்டமின்' மாத்திரை முழுங்கிய தூக்கம்!

● என்.வி.ரமணி, சென்னை - 92 ★

**? அமெரிக்க வங்கிகளின் வாராக் கடன்களும் பெட்ரோல் விலைக் குறைவும் பொருளாதாரப் பின்னடைவுக்குக் காரணமாகக் கூறப்படுகிறது. இதில் பண முதலைகளின் மறைவான திட்டம் இருக்கக் கூடுமல்லவா?**

! நீங்கள் சொல்வதை 'இல்லை' என்று அடியோடு ஒதுக்கிவிட முடியாது. 'இருக்கிறது' என்பதற்கான சாட்சியமும் இப்போதைக்கு இல்லை. ஆனால், participatory notes மூலம் பயங்கரவாத இயக்கங்கள் தங்கள் செல்வத்தைப் பெருக்க, பங்கு மார்க்கெட்டில் முதலீடு செய்வதும், அவசரத் தேவைக்கு விற்பதும் நிச்சயம். இதை சர்வதேச அரசுகள் கட்டுப்படுத்தியே தீர வேண்டும். ○

❒ ரூ. 100/- பரிசு பெறுபவர்:
**எஸ். ஜெயலட்சுமி, கும்பகோணம்**

★ ரூ.50/- பரிசு பெறுபவர்:
**என்.வி.ரமணி, சென்னை - 92**

**ஒருவர்...?**

! அரசியலில் அகம்பாவமும் குரூரமும் நிலைகொண்டுவிட்டதை உணர்த்தும் ஆவேசப் பேச்சு. ராஜ் தாக்கரேயின் செயல்பாடுகளுக்கு நிகரான கொடூரம்; தண்டனைக்குரியது.

● கே.கணேசன், மறைமலைநகர்

**? "யார் பயங்கரவாதி என்பதை, காலம்தான் தீர்மானிக்க வேண்டும். அன்று பயங்கரவாதியாகச் சித்திரிக்கப்பட்ட வாஞ்சிநாதன், இன்று நம்மால் தியாகியாகப் போற்றப்படவில்லையா?" என்று கேட்கிறாரே கமல்?**

! காந்தியவாதிகள் வாஞ்சிநாதனின் செயலை ஏற்க மாட்டார்கள் என்றாலும், வாஞ்சிநாதனின் தீரமும் இன்றைய பயங்கரவாதிகளின் வஞ்சகமும் ஒன்றாகிவிடாது. வாஞ்சிநாதன் நாட்டுக்காகத் தம் உயிரையே கொடுக்கத் தயாராக இருந்தார். இன்றைய பயங்கரவாதத் தலைவர்கள், தாங்கள் ஒளிந்துகொண்டு, மூளைச் சலவை செய்யப்



# அத்வானியின் இரண்டு குடும்பங்கள்!

"நெருக்கடி நிலையின்போது கைதாகி பெங்களூர் மத்திய சிறையிலிருந்த சமயத்தில், சிறைவாசிகள் மத்தியில் மிகவும் மகிழ்ச்சியை ஏற்படுத்தும் வார்த்தை 'ரிலீஸ்'. அதற்குப் பிறகு, எனக்கும் அந்த வார்த்தைமீது ஈர்ப்பு வந்துவிட்டதால், யார் எப்போது புத்தகம் ரிலீஸ் பண்ணக் கூப்பிட்டாலும், நான் உடனே ஒப்புக்கொண்டுவிடுவேன்'' என்று நகைச்சுவையுடன் பேச்சை ஆரம்பித்தார் அத்வானி.

எங்கே? 'என் தேசம் என் வாழ்க்கை' என்ற தமது சுயசரிதை நூல் வெளியீட்டு விழாவில். நூற்றாண்டு கண்ட அல்லயன்ஸ் புத்தக நிறுவனம் இவ்விழாவினை ஏற்பாடு செய்திருந்தது.

''நான் பார்த்த ஒரே தமிழ்ப் படம் 'வீரபாண்டிய கட்டபொம்மன்'தான். சிவாஜி, ராஜ்யசபை உறுப்பினராக, பாராளுமன்றத்துக்கு வந்தபோது அவரிடம், ''எனக்குத் தமிழ் தெரியாது என்றாலும், கட்டபொம்மன் எவ்வளவு பெரிய வீரன் என்பதை உங்கள் நடிப்பின்மூலம் அறிந்துகொண்டேன் என்று சொன்னேன். சுதந்திரப் பொன்விழா ஆண்டில் நான் மேற்கொண்ட அகில இந்திய யாத்திரையின்போது, வீரபாண்டிய கட்ட பொம்மனின் கோட்டைக்குச் சென்றேன். விருதுநகரில் காமராஜருக்கு மரியாதை செலுத்தியபோது, எதிர்க்கட்சிக்காரரான இவர், எதற்காக காங்கிரஸ் தலைவருக்கு மரியாதை செலுத்த வந்திருக்கிறார்? என்று கேட்டார்கள். ஒரு சிறந்த தலைவர் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர் என்றாலும் மரியாதைக் குரியவர்தானே? முதன்முறையாக வாஜ்பாய் பிரதமரானபோது ஆற்றிய உரையில் சுப்ரமணிய பாரதியாரின், 'முப்பது கோடி முகமுடையாள்...' பாடலின் வரிகளை மேற்கோள்காட்டிப் பேசினார்.

என் வாழ்க்கையில் இரண்டு குடும்பங்களுக்கு மிக முக்கியப் பங்கு உண்டு. ஒன்று என்னை உருவாக்கிய ஆர்.எஸ்.எஸ். என்ற பெரிய குடும்பம். இன்னொன்று நான், என் மனைவி, மகன், மருமகள், மகள் ஆகியோரைக் கொண்ட சிறிய குடும்பம். வருமானம் முதல் வருமானவரி வரை எல்லாவற்றையும் கவனித்துக்கொள்வது என் மனைவி கமலாதான். அர்த்தமுள்ள வாழ்க்கை, மகிழ்ச்சியான வாழ்க்கை இரண்டும் ஒருவருக்கு ஒரு சேர அமையாது என்பார்கள். ஆனால், எனக்கு இரண்டும் கிடைத்துள்ளன'' என்றார் அத்வானி.

- எஸ். சந்திரமௌலி

படம் : ஸ்ரீஹரி

# உள்ளே Vs வெளியே

தஞ்சைப் பெரிய கோயிலைக் கட்டுவித்த இராஜராஜ சோழனின், சிலையை அந்தக் கோயில் வளாகத்தில் வைக்க, தொல் பொருள் இலாகா அனுமதி தரவில்லை. சிலை வெளியே நிறுத்தப் பட்டிருப்பது நமக்கு மனசு குறுகுறுக்கிறது. பழைமையைப் போற்றுகிறோம்தான்; இருந்தாலும் இங்கே நம் தொல்பொருள் இலாகாவே கையை விரித்ததுதான் வேதனை.

ஆனால், உலகத்தில் வேறு இடத்தில் நடப்பதைப் பாருங்கள். பொருளாதாரச் சரிவு தொடங்கியவுடன் விழுந்துவிடாமல் நிமிர்ந்துநிற்க பிரிட்டனும் நடவடிக்கை களை எடுக்கிறது. அதற்கு அந்நாட்டு பிரதமர் பிரௌன் வல்லுனர்களைக் கூட்டி ஆலோசனை நடத்துகிறார். நிறைய பேர் கலந்துகொள்ள வேண்டியிருப்பதால் தற்போதைய பிரதமர் இல்லமான, '10, டௌனிங் தெரு வீடு' இடம் கொள்ளவில்லை. இடித்துப் பெரிதாக்கலாம் என்று அந்தக் கட்டடத்தின் மீது யாரும் கைவைக்க முடியாது. அது நாட்டின் பிரதமரானாலும் சரி! நாட்டின் பழைமை வாய்ந்த கட்டடங்களில் ஒன்றான அது சுமார் 250 ஆண்டுகளாக பிரதமரின் இல்லமாக இருக்கிறது. பழைமையில் கைவைக்க அதிகாரம் இல்லாமல், பிரதமர் பக்கத்து வீட்டையும் உபயோகப் படுத்துகிறாராம். 12ம் நம்பர் வீட்டில் வல்லுனர்கள் ஆலோசனை நடக்கிறது; பிரதமர், வழக்கம்போல மந்திரி சபை கூட்டத்தை மட்டும் 10ம் நம்பரிலேயே நடத்துகிறார். ரகசியங்கள் ஒட்டுக் கேட்கப்படாமல் இருக்கவும் இந்த ஏற்பாடாம்.



* இராஜராஜ சோழன்

* பிரிட்டன் பிரதமர் இல்லம்...

– குவளை எழில்



"தலைவர் ஜெயில்ல கைதிகளுக்கு இனிப்பு வழங்கும்போது, ஒவ்வொருத்தர் பேரையும் சொல்லி ஆச்சர்யப்படுத்துறாரே எப்படி?"

"இந்த ஜெயில்லதானே ரொம்ப நாள் இருந்தாரு..!"

– சேகர்

ஜே.வி.ஜே. கண்ணன், திருச்சி.

**நமக்கு உபயோகப்படாதவற்றைத் தான் நாம் 'ஆத்துல' போடுகிறோம்... அதை ஏன் வீணாக 'அளந்து' போட ணும்...?**

வெளியே போகும்போது போட முடியாத அளவுக்கு, அளவு குறைவான உடைகளை, 'ஆத்துல' அதாவது வீட்டுல இருக்கும் போது போட்டுக் கொள்கிறோம். ஆத்துலதானே இருக்கோம் என்பதற்காக, அரைகுறையாக இருக்கக்கூடாது... திடீரென்று விருந்தாளி யாராவது வந்துவிட்டால், அளவு குறைவான ஆடையில் இருக்கும் நம்மைப் பார்த்து, "ஷேம் ஷேம் பப்பி ஷேம்" பாடி கேலி செய்யக்கூடும். ஆகவே 'ஆத்துல' போட்டாலும், சரியான அளவு உடையாகப் பார்த்து 'அளந்து' போடணும்.

கோபாலன் பத்மா, மேற்குமாம்பலம்.

**ஒரு திருமணமான பெண்ணின் பெயர் அவள் கணவன் பெயருடன் சேர்த்து அறியப்படும்போது, ஆண்கள் மட்டும் ஏன் அப்படிச் செய்வதில்லை...?**

இந்தக் கேள்வியை எனது இலக்கிய நண்பரும் - இசையமைப்பாளருமான ரமேஷ் விநாயகத்திடம் சொன்னபோது, பளிச்சென்று கிழ்க்கண்ட பதிலைச் சொன்னார்... "தெய்வங்களே... உமா மகேஸ்வரன், ஜானகி ராமன், ராதா கிருஷ்ணன், வள்ளி நாயகம் என்று தத்தம் மனைவியை முன்னிறுத்திதான் தம்மைக் கூறிக் கொள்கின்றன. எனவே, கோபாலன்



பத்மாவை, பத்மா கோபாலன் என்று மாற்றிக் கொள்ளச் சொல்லவும்'' என்றார்.

**பி. இராஜேந்திரன், லோயர் அணைக்கட்டு.**

***கல் ஒன்றை எடுத்தேன். அதை நாய் ஒன்று பார்த்தது. நான் கல்லை எடுத்தது நாயை அடிப்பதற்காக அல்ல. அப்படியிருந்தும் அது ஓடியது. ஏன்...?***

''கல்லைக் கண்டால் நாயைக் காணோம்'' என்ற பழமொழியைக் காப்பாற்றுவதற்காக ஓடியிருக்கலாம். அது சரி, தெருவில் கிடக்கும் கல்லை நீங்கள் ஏன் எடுத்தீர்கள்?!

**வி.ஜி. சத்தியநாராயணன், நங்கநல்லூர்.**

***குடிக்கின்ற ஆண்களை, ஏன் பெண்கள் பொதுவாக விரும்புவதில்லை...?***

தான் இருக்க வேறு ஏதோ ஒன்றுக்கு முட்டாள்தனமாக மயங்கி, ஆயுசு பூரா, அதற்கு அடிமையாகி ஆண்கள் கிடப்பதை, இளகிய மனம் கொண்ட பெண்களால், பாவம் பொறுத்துக் கொள்ள முடியாது.

**சுந்தர், பெங்களூரு.**

***கிரேஸி குருவே(!?) முற்றும் துறக்க வழி என்னவோ?***

சிஷ்யா... மெகா சீரியல் எழுது. முற்றும் போடுவதைத் துறந்து முடிவில்லாமல் இழுத்தடிக்கும் உபாயத்தை அறிவாய்.

**ஸ்ரீலதா, மதுரை.**

***'அளவுக்கு மீறினால் அமிர்தமும் விஷம்' என்று எப்படி வந்தது?***

கடைந்ததில் வந்தது. அளவுக்கு மீறி அமிர்தத்தை வேண்டி, பாற்கடலைக் கடைந்ததில் ஆலகால விஷம் வந்தது.

**சம்பத்குமார், சேலம்.**

***'சுயசரிதை' எழுதும் உத்தேசம் உண்டா...?***

உத்தேசமா...? பயங்கர உத்வேகமே உண்டு. ஆனால் யாருடைய சுயசரிதையை எழுதுவது என்பது இன்னமும் முடிவாகவில்லை!

**சி. இந்து, விழுப்புரம்.**

***பெண்களின் ஆயுதம் கண்ணீர்; ஆண்களின் ஆயுதம்?***

பெண்களின் கண்ணீருக்கு முன் செல்லுபடி ஆகாத கானல் நீர். ஆண்-பெண் யுத்தத்தில் ஆண் எப்போதுமே நிராயுத பாணிதான்.

**ரா. பிரசன்னா, மதுரை.**

***தமிழ் இலக்கண 'ளவிக்கும்' கிராமத்துக் 'கிழவிக்கும்' உச்சரிப்பைத் தவிர வேறு ஏதாவது ஒற்றுமை இருக்கா சார்...?***

பிறக்கும்போது சேர்ந்து பிறந்த 'ரெட்டைக் கிழவிகள்', வேகமாக 'குடுகுடு'வென்று போனால் 'ரெட்டைக் கிளவிகள்'. ●



''எப்போதும் படிப்பு, படிப்பு என்று முதல் ரேங்க் மாணவன் ஆகாஷ்; எல்லா விஷயங்களையும் கலந்துகட்டி, 'பையன் ஸ்போர்ட்ஸ்ல கில்லாடி போல!' என்று ஆச்சரியப்படுத்தும் மாணவர்கள் தலைவன் ரோஹித்; எப்போதும் ராப் இசை முணுமுணுக்கும் ராம்; தன் குரூப்பை காமெடியால் கலக்கும் பப்லு; இவர்களுடைய சக மாணவி தன்யா. இவர்கள் அனைவரும் ஜில்லென்ற கிளைமேட் கொண்ட ஒரு ஹில் ஸ்டேஷனில் உள்ள பிரபல பள்ளியில், பிளஸ் டூ படிப்பவர்கள். அந்தப் பள்ளிக்கூடத்தில் புதுசாக வந்து சேருகிறான் சூர்யா. அங்கே நடக்கிற கதைதான் குளிர் 100 டிகிரி'' என்கிறார் பெண் இயக்குநர் அனிதா உதீப்.

''இப்போதெல்லாம் தமிழ் சினிமாவில் தலைப்புக்குக் கீழே இலவச இணைப்பாக ஒரு குட்டி வால் ஒட்ட வைப்பது வழக்கமல்லவா? அதனால், இந்தப் படத்துக்கும் குளிர் 100 டிகிரி என்று டைட்டில் வைத்திருக்கிறேன்'' என்னும் இவர் பென்டாமீடியா குழுமத்தின் தலைவர் சந்திரசேகரின் மகள். அமெரிக்காவில் திரைப்பட இயக்கம் மற்றும் ஸ்கிரிப்ட் எழுதுவதற்காகப் படித்திருக்கிறார்.

''இதற்கு முன்பு, 'கல்யாணத்துக்கு நான் பெண் பார்த்துக் கொண்டிருக்கிறேன்' என்று லைட்டான

**என்னுடைய பார்வையில், கமர்ஷியல் என்றால் முதலீட்டுக்கு மேல் லாபம்!**

காமெடி கலந்த ஓர் ஆங்கிலப் படம் எடுத்தேன். போட்ட முதலுக்குப் பழுதில்லாமல், அமெரிக்காவில் ரிலீசாகி லாபம் சம்பாதித்துக் கொடுத்தது. சென்னை சத்யம் காம்ப்ளெக்ஸில் தினசரி ஒரு காட்சியாக ரிலீஸாகி அடுத்த வாரம் இரண்டு காட்சிகளாகி, அதன் பின் பெரிய

# ஜில்லுன்னு ஒரு

தியேட்டருக்கு மாற்றப்பட்டு ஐம்பது நாட்கள் ஓடியது. அதன் பின், எடுத்த 'கலிவரின் பயணங்கள்' என்ற அனிமேஷன் படம், ஆஸ்கார் விருதுக்கு அனிமேஷன் பிரிவில் பரிந்துரை செய்யப்பட்டது. என்ன இருந்தாலும், கமர்ஷியலாக வெற்றிபெறும் ஒரு தமிழ்ப் படம் இயக்கவேண்டும் என்பது என் ஆசை. இரண்டு வருடங்களாக யோசித்து, இந்த ஸ்கிரிப்டை எழுதி இருக்கிறேன்'' என்கிறார்.



* அனிதா உதீப்




''கமர்ஷியல் தமிழ் சினிமாவா?'' என்று கேட்டால், ''கமர்ஷியல் என்பதற்கு, 'முதலீட்டுக்கு மேல் லாபம் சம்பாதிக்க வேண்டும்' என்று அர்த்தம். ஒரு படத்தின் கதைதான் ஹீரோ என்பதும், அது எப்படித் திரையில் சொல்லப்படுகிறது என்பதும் ரொம்ப முக்கியம். கதையில் அடுத்தடுத்து நடக்கும் சம்பவங்கள்தான் கதையை நகர்த்திக்கொண்டு போக வேண்டும். அந்தக் கோணத்தில் பார்த்தால், குளிர் ஒரு சிறந்த கதை. இப்போது எந்தப் படத்தைப் பார்த்தாலும் காதல்தான் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது. குளிர் படத்தில் காதலும் உண்டு; ஆனால் அதுவே பிராதானமில்லை.

ஆறு மாதங்களில் சுமார் ஐந்நூறுக்கும் அதிகமான பள்ளிக்கூட மாணவர்களைப் பார்த்து, கடைசியில் நான் மனசில் உருவாக்கி வைத்திருந்த கேரக்டர்களுக்குப் பொருத்தமானவர்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறேன். ஹீரோயினாக தமிழில் அறிமுகமாகும் ரியா ஒரு பிரபல மாடல். படத்துக்கு இசையமைத்தவரும் ஒரு புதிய இளைஞர்தான். சகி - இசை யமைப்பாளர் முரளியின் மகன்.''

'' 'குளிர்' படம் 'வெயில்' போல ஹிட் ஆகுமா?'' - கேட்டால்,

''வித்தியாசமான கதை, யதார்த்தமான, ஆல் நியூ புதுமுகங்களின் நடிப்பு, கண்ணுக்குக் குளிர்ச்சியான படப்பிடிப்பு இவற்றின் காரணமாக நிச்சயம் ஹிட் ஆகும்'' என்கிறார் அனிதா கண்களில் நம்பிக்கை பொங்க.

– எஸ்.எஸ்.எம்.



# கல்கி



2008 நவம்பர் 23
ஸர்வதாரி கார்த்திகை 8
மலர் : 67
இதழ் : 17

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## ராகுலின் புலம்பல், ஆல்வாவின் ராஜினாமா!

"**ப**டித்த இளைஞர்கள் அரசியலில் பங்கேற்க வேண்டும்" என்று அழைப்பு விடுத்துள்ளார் ராகுல் காந்தி. தாம் படித்த செயின்ட் ஸ்டீஃபன்ஸ் கல்லூரியின் மாணவர்கள் கூட்டத்தில் பேசக் கிடைத்த வாய்ப்பில், இந்தியாவிலுள்ள அரசியல் கட்சிகளின் நிலை குறித்து அங்கலாய்த்திருக்கிறார்! "நமது அரசியல் கட்சிகளில் ஜனநாயகமோ வெளிப்படையான செயல்பாடோ இல்லையே!" என்பது ராகுல் காந்தியின் வருத்தம்! இந்த நிலைமையை மாற்றுவதற்குத்தான் படித்த இளைஞர்களை அவர் அரசியலுக்கு அழைக்கிறார்!

ஆனால், படித்த இளம் அரசியல்வாதியான, அனைத்திந்திய காங்கிரஸ் கமிட்டியின் பொதுச் செயலாளரான ராகுல் காந்தி தமது கட்சியைச் சீரமைக்க என்ன செய்து கொண்டிருக்கிறார் என்று பார்த்தால் ஏமாற்றம்தான்!

தேர்தல் தொகுதிகள் ஒதுக்குவதில் அநீதி நிகழ்ந்திருப்பதாகக் குற்றம் சாட்டி, காங்கிரஸ் பொதுச் செயலாளரான மார்கரெட் ஆல்வா ராஜினாமா சமர்ப்பித்துள்ளார். தொகுதிகள், பணம் செலுத்தியவர்களுக்கு 'விற்கப்பட்டுள்ளதாக'க் குற்றம் சாட்டுகிறார் ஆல்வா! பெரும்பாலும் காங்கிரஸ் பிரமுகர்களின் வாரிசுகளுக்கே அவை அளிக்கப்பட்டிருப்பதாகவும் சுட்டிக்காட்டும் மார்கரெட் ஆல்வா, அடுத்த மூச்சிலேயே தமது மகனுக்கு கர்நாடக மாநிலத் தேர்தலில் தொகுதி ஒதுக்கப்படவில்லை என்று அங்கலாய்த்திருக்கிறார்! இந்தப் புலம்பலினால்






ஆல்வாவின் குற்றச்சாட்டு நீர்த்துப் போகிறதென்றாலும், காங்கிரஸில் உட்கட்சி ஜனநாயகம் அடியோடு இல்லை என்பது மட்டும் மீண்டும் நிரூபணமாகியிருக்கிறது.

தொகுதிகள் ஒதுக்கப்பட்ட முறையில் ராகுல் காந்திக்குக்கூட அதிருப்தி என்று மார்கரெட் ஆல்வா சொல்ல, ராகுல் காந்தியோ, அதை மறுத்து, "சில இளைஞர்களுக்குத் தொகுதிகள் ஒதுக்கும்படி சிபாரிசு மட்டுமே செய்தேன்" என்கிறார்! காங்கிரஸ் தலைமையோ, மார்கரெட் ஆல்வாவின் போக்கைக் கண்டித்து, ஜெயிக்கக்கூடிய நபர்களுக்கு மட்டுமே தொகுதிகள் ஒதுக்கியிருப்பதாகச் சொல்கிறது!

ஆகக் கூடி, காங்கிரஸின் வேட்பாளர் தேர்வு முறை என்பது, பணபலம், செல்வாக்கு, ஜாதி, சிபாரிசு ஆகியவற்றின் அடிப்படையில்தான்! தகுதி வாய்ந்த ஒரு நபரை வேட்பாளராக்கி, ஆதரவு தந்து ஜெயிக்க வைப்பதற்கு காங்கிரஸ் உழைக்கத் தயாராயில்லை! ஓர் உறுப்பினரின் உழைப்பு, திறமை, ஆற்றல், நேர்மை, சமூக நோக்கு, தேச பக்தி என்கிற அடிப்படைகளெல்லாம் உட்கட்சி ஜனநாயகத்துடன் சேர்த்து குழி தோண்டிப் புதைக்கப்பட்டுவிட்டன!

ராகுல் காந்தி உண்மையிலேயே இந்திய ஜனநாயகத்தைப் பலப்படுத்த எண்ணினால், முதலில் காங்கிரஸில் நாடு தழுவிய உட்கட்சித் தேர்தல்களை நடத்தச் செய்து, முன்னுதாரணமாக விளங்கட்டும். அடுத்து, உட்கட்சித் தேர்தல் நடத்தாத கட்சிகள் தேர்தலில் போட்டியிட முடியாது என்கிற வகையில் தேர்தல் சட்டத்தைச் சீர்திருத்த குரல் கொடுக்கட்டும். காங்கிரஸ் பலப்படவும், இந்திய ஜனநாயகம் புத்துணர்வு பெறவும் அவர் பொறுப்புகளைச் சுமப்பதோடு, அதிகாரங்களைப் பரவலாக்கவும் தயாராக இருக்க வேண்டும். இல்லையெனில் தோல்விகளே தொடர்கதையாகும்.

○

உடையழகு... நடையழகு...

# பளபளா பாலிமர்!

நகைகள் பிடிக்காத பெண்ணும் உண்டோ?

ஜீன்ஸ், சல்வார்-கமீஸ், கேப்ரீஸ், ஷார்ட் குர்தீஸ்... என விதவிதமான ஆடைகளுக்கு ஏற்றவாறு காதுக்குக் தொங்கட்டான், கழுத்தில் சின்னதாக ஒரு டாலர், கைகளில் கலர்கலராக படா சைஸில் வளையல்கள்... என கல்லூரிப் பெண்கள் ஸ்டைலில் தினம் ஓர் அத்தியாயம் எழுதித் தள்ளிக்கொண்டிருக்கின்றனர்.

இன்றைய பெண்கள் வெரைட்டி வனிதைகள். இவர்களுடைய டிமாண்டுக்காகவே ஆழ்வார்பேட்டை வீனஸ் காலனியில் இருக்கும் ஷ்யாமா கிருஷ்ணாவே புதுவித பாலிமர் ஜுவல்லரிகளை டிஸைன் பண்ணி வருகிறார். அவர் நம்மோடு பேசும்போது..

''நான் டிஸைன் செய்யும் பாலிமர் நகைகள் எக்ஸ்க்ளூஸிவாக கல்லூரி மாணவிகள் மற் றும் இளம்பெண்களுக்கு! இந்த ஏஜ் க்ரூப்பில் இருக்கறவங்க ட்ரெடிஷனலான நகை போட மாட்டாங்க. ஃபங்ஷன், பார்ட்டி, மேரேஜ், காலேஜ்... என எந்த இடத்துக்கும், அகேஷனுக்கும் கலர்கலரான இந்த பாலிமர் ஜுவல்லரி பொருந்தும் எந்த அலர்ஜியையும் ஏற்படுத்தாது; உடையவே உடையாது; கலரும் மங்காது. முகத்துக்கும், ஆடைக்கும் ஏற்றவாறுகூட நகைகளை பாலிமரில் டிஸைன் செய்யலாம்'' என்கிறார் ஷ்யாமா கிருஷ்ணா.

''என் மகளைப் பார்க்க யு.எஸ். போயிருந்தபோது, அங்கு ஒரு பெண்மணி பாலிமர் ஜுவல்லரி செய்வதைப் பார்த்து ஆர்வம் மேலிட கற்றுக்கொண்டேன். கற்றுக்கொள்ள பத்து நாட்கள்தான். ஆனால் கை பழக இரண்டு வருடங்களாச்சு. இந்த மாதிரி நகைகள் செய்ய, பொறுமை தேவை. முதலில் பீட்ஸ் செய்து அவனில் ஹீட் செய்யவேண்டும். பிறகு வெளியில் எடுத்து தேய்தேயென தேய்த்து வழவழப்பாக மாற்றி ஃபினிஷிங் கொடுக்க வேண்டும்.

பச்சை, நீலம், ஆரஞ்சு, கறுப்பு... என பல வண்ணங்களில் மின்னும் பாலிமர் ஜுவல்லரிகள், கையைக் கடிக்காத விலையில் 150 ரூபாயிலிருந்து 400 ரூபாய் வரை கிடைக்கின்றன'' என்னும் ஷ்யாமா க்ருஷ்ணா டிசைன் செய்யும் நகைகள், தனிப்பட்ட கடைகளில் கிடைப்பதில்லை.

– லதா சேகர்

**'பூ' படத்தின் இயக்குநர் சசி, ரொம்ப சாஃப்ட். அளவாகப் பேசுகிறார். ''நான் எதற்காக வளவளன்னு பேசணும்? என் படங்கள் பேசட்டும்; அதைப் பார்த்துட்டு மக்கள் பேசட்டும்; அதுதான் எனக்கு வேணும்'' என்கிறார்**

**எதற்காக 'பூ'ன்னு படத்துக்கு ஒற்றை எழுத்து டைட்டில்?**

''படத்துல ஹீரோயினுக்கு மல்லி, ரோஜா, தாமரைன்னு பேர் இல்லை. பூக்களை வெச்சு ரொம்ப கலர்ஃபுல்லா பாட்டு ஸீனும் வைக்கலை. 'பூ'ன்னு சொன்னதும் மனசுல ஒரு மணம், மென்மை, அழகுணர்ச்சி ஏற்படுதில்லையா! அதுபோல ஓர் உணர்வு இந்தப் படத்தைப் பார்க்கும் ரசிகர்கள் மனசுல ஏற்படும். ஹீரோயினோட மென்மையான குணம் நினைவுக்கு வரும்; இவ்வளவு நல்ல பொண்ணுகூட இருக்க முடியுமா?ன்னு தோணும். அவ மாதிரி நாமும் இருக்கலாமேன்னு நினைக்க வைக்கும். படம் வந்த பிறகு பாருங்க, படத்துக்கு டைட்டில் ரொம்பப் பொருத்தமா தெரியும்.''

**நீண்ட நாளைக்குப் பிறகு தமிழ்ல சிறுகதை ஒண்ணு படமாயிருக்கு இல்லையா?**

''ஆமாம்! நான் காலேஜ்ல படிச்ச போது, 'வெயிலோடு போய்' என்ற தலைப்புல ச. தமிழ்ச்செல்வன் எழுதின சிறுகதையைப் படிச்சேன். அது என்னை ரொம்ப நெகிழ வைத்தது. மறுநாள் நண்பன்கிட்ட கதையைக் கொடுத்துப் படிக்கச் சொன்னேன். 'அற்புதமான கதை; படிச்சுட்டு அழுதுட்டேன்' என்றான். உண்மை என்னன்னா, நானும் அந்தக் கதையைப் படிச்சிட்டு அழுதுட்



டேன். ஆனா நான் அதை வெளியில் சொல்லலை. சிவகாசியில் பட்டாசுத் தொழிற்சாலையில வேலை பார்க்கிற பெண்ணோட கதை. பட்டாசு ஓசைக்கு நடுவே பூ பூக்கும் ஓசையைப் பதிவு செஞ்சிருக்கோம்!''

**காலேஜ் நாள்ல படிச்ச கதையைப் படமெடுக்க ஏன் இத்தனை கால மாச்சு?**

''நல்ல கதை. அதற்குச் சிறப்பா ஸ்க்ரிப்ட் எழுதி, சரியான சமயத்தில பட மெடுக்கணும்னு நினைச்சுக்கிட்டு இருந் தேன். இதற்கு முன்னால, ஸ்ரீகாந்தை வெச்சு 'ம்'ன்னு படம் பண்ணத் தயாரான போது, தவிர்க்கமுடியாத சில பிரச்னை களால அது நின்னுப்போச்சு. அடுத்து, மோஸர்பியர் கம்பெனியில கூப்பிட் டுப் படம் பண்ணுங்கன்னு சொன் னப்போ, இந்தக் கதையைச் சொன் னேன். உடனே ஓ.கே. சொன்னாங்க. இது கிராமத்துக் கதை. நானோ, கிரா மத்துப் பரிச்சயமில்லாதவன். கதைக் களமான கரிசல்காடான ஆலங் குளம் போய், பத்து மாசம் தங்கி இருந்து, அந்தக் கிராமத்துக் காற்றைச் சுவாசிச்சு, மண்ணை முகர்ந்து, ஸ்க்ரிப்டை எழுதி



முடிச்சேன்.''

**மறுபடியும் மறுபடியும் உங்கள் படங்களில் ஸ்ரீகாந்த், ஹீரோ ஏன்?**

''ஸ்ரீகாந்துக்கும் எனக்கும் எந்தப் பிரச்னையும் வருவதில்லை. அவருக்கு இந்தப் படத்துல வரும் கேரக்டர் மாறுபட்ட ஒண்ணா இருக்கும்னு நினைச்சேன். சொல்லப்போனா அவருக்கு இந்தப் படத்துல ரோல் சின்னதுதான். இந்தப் படத்தோட முதல் ஹீரோ கதை. இரண்டாவது ஹீரோன்னு, கதாநாயகி பார்வதியைத்தான் சொல்லணும். மூன்றாவதுதான் ஸ்ரீகாந்த்! ஆனாலும் நடிப்புல பின்னி இருக்காரு.''



* இயக்குநர் சசி

**ஹீரோயின் செலக்ஷன் எப்படி?**

''படத்துக்குப் புதுமுகம்தான் ஹீரோயின் என்று முடிவு செய்தபின், ஒரு மாடல் கோ-ஆர்டினேட்டர் மலையாளப் பட ஸ்டில்லைக் காட்டி, அதில் இருந்த ஹீரோயினைப் பார்க்கிறீங்களான்னு கேட்டார். அந்த ஹீரோயினைவிட, அவருக்குப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த பார்வதியின் முகம் என் கவனத்தை ஈர்த்தது. ரொம்பவும் பளிச்சென்று இருந்த அவரோட நிறம் என் படத்துக்குத் தேவையில்லை என்றாலும், அவரது முகம் மிகவும் பொருத்தமாக இருக்கும்னுபட்டது. அதனாலதான் படம் முழுக்க அவருக்கு டல்லான மேக்- அப் போட்டு நடிக்க வெச்சேன்.''

**மியூசிக் டைரக்டர் புது முகம் ஏன்?**

''நான் அறிமுகப்படுத்திய விஜய் ஆன்டனியின் இசை எனக்கு மிகவும் பிடிக்கும்னாலும், அவர் இப்போ ரொம்ப பிஸி. எனவே, திறமையான புது இசையமைப்பாளரை இந்தப் படத்தின் மூலம் அறிமுகப்படுத்த முடிவு செஞ்சேன். ஏழெட்டு பேர் தங்கள் திறமையை வெளிப்படுத்தும்விதமாக டெமோ மியூசிக் அனுப்பியிருந்தாங்க. அவற்றில் எதுவுமே என்னை இம்பரஸ் பண்ணலை. என்னுடன் தினமும் பேட்மின்டன் ஆடும் ஒரு பெண்மணி, எதேச்சையா தன் கணவர்கூட இசையமைப்பாளர்தான்னு சொல்ல, அவரையும் டெமோ மியூசிக் தரச் சொன்னேன். அது நன்றாக இருக்கவே, அவரிடம் ஒரு சிச்சுவேஷன் சொல்லி, அதற்கு மியூசிக் கம்போஸ் பண்ணும்படி சொன்னேன். தன் இசையால் என்னை அசத்திய குமரன்தான் பூ படத்தின் இசையமைப்பாளர்.''

**- எஸ். சந்திரமௌலி**

**"அந்த ஹீரோயினைவிட, அவருக்குப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த பார்வதியின் முகமே என்னை ஈர்த்தது!"**



# ஏகன்

கலையில் குழைந்து, யதார்த்தப் படங்களை வியாபாரத்தில் வெற்றிபெறச் செய்து, மக்களின் ரசனையிலும் கோலிவுட் பயணத்திலும் பாய்ச்சலை ஏற்படுத்தும் குழுவினர் ஒரு ரகம்.

மந்தமான விசிலடிக்கும் ரசிகனை ஒரு இன்ச்கூட உயர்த்தாமல், ஃப்ரிஜ்ஜில் வைத்துக் காக்கும் பெரிய ஹீரோ பட்ஜெட் குழுவினர் இன்னொரு ரகம். இந்த முரண்பாட்டுச் சூழலில் ஏகனின் வரவு. (இதுல இது எந்த ரகம்?)

கல்லூரியில் ஸ்டூடண்டாகச் சேரும் சி.பி.சி.ஐ.டி. போலீஸ் அதிகாரி அஜித். இளந்தொப்பையில் அழகாக இருக்கிறார். அவரை ஸ்டூடண்டாக ரசிகர்கள் ஏற்க மாட்டார்கள் என பலமாக நம்பிவிட்ட இயக்குநர், 'ஸார்! அங்கிள்' என ரேக்கிங் செய்யும் காலேஜ் டீமை உருவாக்கி, ஸ்டூடண்ட் அஜித்தை, பாடம் சொல்லிக் கொடுக்கும் லெக்சரரை லவ் பண்ண வைத்துவிடுவது லாஜிக்கான மேஜிக். கதை 'கன்'னில் குண்டுக்குப் பதில் காற்று.

டி.ஆர். படங்களில் முடிந்துவிட்டதாக நினைத்த, பிரின்ஸிபாலை கூமுட்டையாகக் காட்டும் காட்சி, இந்தக் காலத்திலும் தொடர்வது அபத்தம். லூஸு முதல்வரான ஜெயராம் கால்ஷீட் வேஸ்ட்.

நாகரிகமான ட்ரெஸ்ஸில் ஸ்டூடண்ட்ஸ் ஒழுங்காக இருக்க, பப்பரபான்னு முதுகு தெரிய ஸ்லீவ்லெஸ் கையோடு லெக்சரராக வரும் நயன்தாரா, அநியாயத்துக்கு தாராளம். காமெடி இல்லாத குறைக்கு, வில்லன் சுமன் ஒவ்வொரு எதிரியையும் கொன்றுவிட்டு, ஃபீல் பண்ணி அழும் காட்சி; கரண்ட் கட் புழுக்க எரிச்சல் ஏ.ஸி. தியேட்டரிலும், சினிமா இயக்குநராக பார்டர் மார்க்கில் பாஸாகி விட்டார் டான்ஸ் மாஸ்டர் ராஜூ சுந்தரம். பாடல் காட்சிகள் ஆட்டத்தோட பார்க்க நல்லாயிருக்கு. வெளியே வந்து ரசிகனின் உதடுகள் முணுமுணுத்தால் தானே வெற்றி. அவன் ஊமையா வெளிய வர்றான்.

ரசிகனின் விசில் சப்தம் கதாநாயகனுக்கு மட்டுமல்ல; காட்சிக்கும் எழும்பணும். அது மிஸ்ஸிங்.

அஜித் என்னும் ஒரே ஒரு தோட்டா உள்ள ஏ 'கன்'. ஒருமுறை சுடலாம் ஸாரி! பார்க்கலாம்.

– அமிர்தா

# சகலகலா

புதிய சகாப்தம். பத்து, பன்னிரண்டு வருடங்களுக்கு ஒருமுறை கிரிக்கெட் வரலாறு திருத்தி எழுதப்படுவது உண்டு. மே.இ. தீவு ஆரம்பித்து வைத்த வரலாற்றை தொண்ணூறுகளின் மத்தியில் திருத்தி எழுதியது ஆஸ்திரேலியா.




இப்போது தோனி புதிய வரலாற்றுக்குப் பிள்ளையார் சுழி போட்டிருக்கிறார். கபில் தேவுக்குப் பிறகு, இந்திய அணியை உலக அரங்கில் முன்னிலைப்படுத்த ஒரு தலைமை கிடைத்து விட்டது.

ஆஸ்திரேலியா போன்ற மலைப்பாம்பைக்கூட அநாயாசமாகச் சுருட்டி விழுங்கமுடியும் என்று நிரூபித்துக் காட்டிவிட்டார் தோனி. சரியாக ஒரு வருடம். தோனி தலைமைப் பொறுப்பை ஏற்றபிறகு இந்திய அணி பெற்ற வெற்றிகள், எல்லா எதிர்பார்ப்புகளையும் மிஞ்சிவிட்டன. 20-20 உலகக் கோப்பை; ஆஸ்திரேலியாவில் நடைபெற்ற முத்தரப்பு நாடுகளுக்கான போட்டியில் வெற்றி; பாகிஸ்தான், இலங்கை அணிகளுடனான ஒருநாள் தொடர் வெற்றிகள்; இவை மட்டுமின்றி தலைமையேற்ற மூன்று டெஸ்டுகளிலும் வெற்றியை மட்டுமே சந்தித்திருக்கிறார் தோனி. கனவு போல எல்லாமே நடந்துகொண்டிருக்கிறது.

பாண்டிங் போன்றவர்களின் போஷாக்கான யோசனைகளைக் கொண்ட ஓர் அணியை அதே சமபலமுள்ள யோசனைகளைக் கொண்டுதான் எதிர்கொள்ள முடியும். தோனியின் முன்னுணர்வுதான் பல நிகழ்வுகளைச் சாத்தியமாக்கியிருக்கிறது. மைதானத்தில் ஒரு செஸ் வீரன் போல காய்களை நகர்த்தினார். நாக்பூர் டெஸ்ட்டில் துணிச்சலாக விஜய்யை அணியில் நுழைத்தார். மூன்றாவது நாளன்று பந்துவீச்சாளர்களை ஆஃப் சைடில் பந்துவீசச் செய்து, ஆஸ்திரேலியாவின் திட்டங்களை நொறுக்கிக் காட்டினார். பாண்டிங், இதற்கு முன்னால் 2005ல் ஏஷஸ் தொடரில் தோற்றுப்போனதுதான் அவருடைய முதல் அவமானம். இப்போது மற்ற நாட்டு கேப்டன்கள் தோனியின் உத்திகளைப் பின்பற்றப் போவதாக வாக்குறுதி கொடுத்திருக்கிறார்கள்.

எல்லா கேப்டன்களுக்கும் ஒரு போறாத காலம் வரும். தோனியின் சிற்றமிகு தலைமைப் பண்பு பாண்டிங்கை, சற்றே நிலைகுலைய வைத்ததென்னவோ உண்மைதான். நாங்கள் எல்லாவிதத்திலும்

# தோனி!

தோற்றுப்போய்விட்டோம் என்று ஒப்புக்கொண்டுள்ளார். அடுத்த வருடம் ஆஸ்திரேலிய அணி, இந்தியாவில் வந்து ஏழு ஒருநாள் போட்டிகளில் ஆடவிருக் கிறது. அப்போது இன்னும் பலமான முன்னேற்பாடுகளுடன் வருவார் என்று எதிர் பார்க்கலாம்.

வெற்றி உறுதி என்று தெரிந்தபிறகு, தோனி தலைமையை கங்குலியிடம் வழங்கி அவருடைய சேவகனாகச் சில நிமிடங்கள் நின்றது அழகான காட்சி. ஒரு கிரிக்கெட் வீரனுக்கு (கங்குலி) இதை விடவும் அற்புதமான கடைசி நிமிடங்கள் வாய்க் காது. தோனியின் பண்புகள் மற்ற வீரர்களையும் தாக்கியிருக்கின்றன. எந்தச் சிக்கலில் இருந்தும் மீளலாம் என்கிற நம்பிக்கை இப்போது இந்திய அணி வீரர்களுக்கு வந்திருக்கிறது.

அணியை இன்னமும் பட்டை தீட்டும் பொறுப்பு தோனியிடம் இருக்கிறது. இஷாந்த் சர்மா பொன் முட்டையிடும் வாத்து. ஓய்வு இல்லாமல் அவரை ஆடவைத்து நோகவைக்கக் கூடாது. கபில்தேவுக்குப் பிறகு அவருக்கு இணை யான ஒரு கேப்டன் இந்திய அணிக்குக் கிடைத்தாலும், அதேபோலொரு ஆல் ரவுண்டர் கிடைப்பது பெரும்பாடாக இருந்துவருகிறது. ஃப்ளிண்டாஃப், வாட்சன்போல ஒரு ஆல்ரவுண் டர் கட்டாயம் தேவை. சமீபகாலமாக இந்திய அணியில் ஓர் ஒழுங்கீனம் தென்படுகிறது. தேவை யின்றி மோசமான நடத்தைக்காக வீரர்கள் தலையைத் தொங்கப்போட்டு மேட்ச் ரெஃப்ரி முன்நிற்பது, அவசியமாகத் தவிர்க்கப்படவேண் டிய ஒன்று. கும்ப்ளே, தெண்டுல்கரை முன்னு தாரணமாக வைத்துக்கொள்ள வேண்டும்.

தோனி போலவே ஏற்றமிகு கேப்டனை அடைந்திருக்கிறது இங்கிலாந்து அணி. பீட்டர்ச னும் தோனி போலவே நவசிந் தனைகள் கொண்டவர். இங்கிலாந் துடனான ஒருநாள் மற்றும் டெஸ்ட் போட்டிகள் பலத்த போட்டி மனப் பான்மையுடன் ஆடப்படும் என் பதில் சந்தேகமில்லை. இந்திய கிரிக்கெட்டுக்கும் ரசிகர்களுக்கும் இது ஒரு பொற்காலம்.

ச.ந.கண்ணன்












# நடக்குமென்பார்;

**மேஷம்:** திருமணக் காரியம் கூடி வரும். வீடு, மனை வாங்க உகந்த நேரம். உத்தியோகத்தில் மாற்றம் உண்டாகும். வெளிநாடு செல்லும் சூழ்நிலை உருவாகும். வியாபாரத்தில் நல்ல ஆதாயம் ஏற்படும். மன உளைச்சல் சரியாகும். வழக்கு வெற்றி அளிக்கும். ராகு/கேது வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**ரிஷபம்:** தெய்வ அனுகூலம் ஏற்படும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். வெளியூர் பிரயாணம் வந்து சேரும். தாயின் ஆரோக்கியம் பாதிக்கப்படும். கடன் சுமை தீரும். வழக்கு தாமதம் ஆகும். பொருளாதாரத் தட்டுப்பாடு இருக்காது. குரு/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மிதுனம்:** சுபநிகழ்ச்சி கை கூடும். உடல் நிலையில் கவனம் செலுத்தவும். வேலைப் பளு அதிகரிக்கும். கணவன், மனைவி இல்லற வாழ்வில் அனுசரித்துப் போவது நல்லது. பணக்கஷ்டம் இருக்காது. சகாக்களால் தொல்லை வரும். வாகனங்களில் செல்லும் போது உஷார். ராகு/கேது வழிபாடு செய்து வர நலம் உண்டாகும்.

**கடகம்:** மனக் குழப்பம் நீங்கும். முயற்சிக்கும் காரியம் பலிதமாகும். தடை விலகி திருமணம் கைகூடும். நீண்ட தூரப் பிரயாணம் வந்து சேரும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். கடன் சுமை குறையும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். வெளியூர் மனிதர்களால் நல்ல தகவல் வந்து சேரும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**சிம்மம்:** மனத்தில் புத்துணர்ச்சி ஏற்படும். பணம் புழக்கத்தில் இருக்கும். திருமணம் கைகூடும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். வாகனங்களில் செல்லும்போது கவனம் தேவை. வீடு/மனை வாங்க ஏற்ற காலம். சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கன்னி:** இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். நண்பர்களை விட்டு



"என்னை மாதிரி ஆட்களை 'ப்ளாக்கேட்' படையில சேர்த்தா பாதுகாப்புல பிரச்னை வராது!"

விலகிச் செல்ல நேரிடும். புதிய வேலை வாய்ப்பு வந்து சேரும். உடல்நிலை முன்னேற்றம் உண்டாகும். செலவுகள் சுபமானதாக இருக்கும். பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். எதிர்ப்புகள் அழியும். பணத் தட்டுப்பாடு இருக்காது. ராகு/கேது/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

நடக்கும்!

**துலாம்:** புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். வீடு மாற்றம் ஏற்படும். நீண்ட காலக் கடன் தொல்லை தீரும். உத்தியோகத்தில் மாறுதல் உண்டாகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வழக்கு, வியாபாரம் வெற்றி அளிக்கும். எதிர்ப்புகள் விலகும். ராகு/கேது/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம்:** புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். வெளிநாடு செல்லும் யோகம் வந்து சேரும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். திருமணம் கூடி வரும். பொருளாதாரக் கஷ்டம் இருக்காது. வாக்கு வன்மை மேலோங்கும். வராத நிலுவைகள் வந்து சேரும். சனி பகவானை வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**தனுசு:** பண வரவு உண்டு. கூட்டாளிகளைப் பிரிய நேரிடும். வாக்குவாதம் தவிர்க்கவும். இல்லற வழியில் அனுசரணை தேவை. கடன் சுமை தீரும். வாகனங்களில் செல்லும்போது உஷார். உணவுக் கட்டுப்பாடு அவசியம். உடன் பிறந்தவர்களால் அனுகூலம் ஏற்படும். கல்வியில் அதிக கவனம் செலுத்தவும். ராகு/கேது/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மகரம்:** உடல் நிலையில் கவனம் தேவை. பணத் தட்டுப்பாடு அதிகரிக்கும். வழக்கு, வியாபாரம் சற்று தாமதம் ஆகும். உணவுக் கட்டுப்பாடு அவசியம். வாகனங்களில் செல்லும்போது உஷார். வியாபாரத்தில் மந்தமான சூழ்நிலை தென்படும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கும்பம்:** ஏற்றம் மிகுந்த வாரம். பணக் கஷ்டம் இருக்காது. செலவுகள் சுபமானதாக இருக்கும். நீண்ட கால வழக்கு வெற்றி அளிக்கும். சொத்துகள் வாங்க நேரிடும். திருமணம் கைகூடும். ஆஞ்சநேயர் வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மீனம்:** எதிரிகள் தொல்லை விலகும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வேலையில் உயர்வு ஏற்படும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். கடன் சுமை தீரும். நண்பர்கள் விலகிப் போவார்கள். குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். ○

**23.11.08 முதல் 29.11.08 வரை**



✱ சபரிமலை

சிறப்பினைப் பெற்றுத் தருகிறேன்'' என்று உறுதிமொழி அளித்திருக்கிறாராம்.

**ச**பரிமலை உள்ளிட்ட கேரளாவில் உள்ள சுமார் 1200 கோவில்கள், திருவாங்கூர் தேவசம்போர்டின் கட்டுப்பாட்டில் உள்ளன. இந்த போர்டின் ஆண்டு வருமானத்தில், அறுபது சதவிகித வருமானம் சபரிமலையிலிருந்துதான் வருகிறது. இந்த அமைப்பின் ஃபிக்ஸட் டெபாஸிட் மட்டும் 240 கோடி. ஆனாலும், அவ்வப்போது சர்ச்சைகளுக்குள் சிக்கிக்கொள்வதில் இவர்களுக்கு நிகர் இவர்களேதான். பிரசாதம் தயாரிக்கப் பொருட்கள் வாங்குவது முதல்,

# பீ.டி. உஷா

**அ**ண்மையில் கன்னடம், தெலுங்கு மொழிகளுக்கு 'செம்மொழி' அந்தஸ்து அளிக்கப்பட்டிருப்பதைத் தொடர்ந்து, கேரளாவில் மொழிப் பிரச்னை தலைதூக்கி உள்ளது. 'எழுத்து விளக்கு' என்ற இளம் எழுத்தாளர்களுக்கான பயிற்சிப் பட்டறையின் துவக்க நிகழ்ச்சியில், தலைமைதாங்கிய கேரள முதல்வர் அச்சுதானந்தன், ''சமஸ்கிருதம், தமிழ் போன்ற தொன்மையான மொழிகளுக்குச் செம்மொழி அந்தஸ்து அளிப்பதை ஏற்றுக் கொள்ளலாம். ஆனால், தெலுங்கு, கன்னடத்துக்கு எந்த அளவுகோலை வைத்துச் செம்மொழி அந்தஸ்து அளிக்கப்பட்டுள்ளது?'' என்று ஆவேசமாகக் கேட்டார். கேரள இலக்கிய உலகத்தினரும் இந்தக் கேள்வியை எழுப்புகின்றனர். கேரள கவர்னர், ''தக்க நேரத்தில் மத்திய அரசிடம் பேசி, மலையாளத்துக்கும் செம்மொழி



✱ அச்சுதானந்தன்

மிகவும் புனிதமான மேல்சாந்தி பதவிக்குரியவரைத் தேர்ந்தெடுப்பது வரை... ஊழல்; லஞ்சம் என்று ஏகப்பட்ட புகார். இந்த வருட மேல்சாந்தி நியமன முறைகேடுகளை விசாரித்த நீதிபதி பத்மநாபன் நாயர், 'தகுதி அடிப்படையில் சிலர் தேர்ந்தெடுக்கப்பட்டு ஒரு பட்டியல் தயாராகும். அதிலிருந்து குலுக்கல் முறையில் மேல்சாந்தி பதவிக்குரியவரைத் தேர்ந்தெடுக்கும் முறையில் தவறேதுமில்லை. என்றாலும், இறுதிச் சுற்றில் கிரிமினல் குற்றம் சாட்



✱ பி.டி. உஷா

# டார்கெட்!

டப்பட்ட ஒருவர் எப்படி இடம்பெற்றார்?' என்று கொக்கி போட தேவசம்போர்டிடம் உரிய பதில் இல்லை.

கேரளாவில் மிக முக்கியமான நகரங்களில் ஒன்று கொச்சின். டெல்லி மெட்ரோ ரயில் நிர்வாகம், கொச்சினில் நடத்திய சர்வேயின்படி, அந்த நகரத்தில் ஒரு மணி நேரத்தில் 650 பஸ்களில், சுமார் பதினாறாயிரம் பயணிகள் பயணம் செய்கிறார்களாம். இது 2010ஆம் ஆண்டில் இருபத்தாறாயிரமாகவும், 2025ஆம் ஆண்டில் நாற்பத்தெட்டாயிரமாகவும் அதிகரிக்குமாம். இதற்கான நிதியை எப்படித் திரட்டுவது என்பதுதான் இப்போதைய பிரச்னை. அரசு - தனியார் கூட்டுத் திட்டமாக இதை நிறைவேற்றினால், பயணக் கட்டணத்தை மலிவாக நிர்ணயிக்கமுடியாது! மத்திய அரசும், மாநில அரசும் தலா முப்பது சதவிகிதம் நிதியளிக்க, மீதிக்கு ஜப்பான் நாட்டு வங்கியிடம் கடனுதவி பெறலாம் என்று ஓர் ஆலோசனை கூறப்பட்டுள்ளது.

பயோலி எக்ஸ்பிரஸ் என்று புகழப்படும் பி.டி. உஷா, தன் சொந்த ஊரான பயோளியிலிருந்து சுமார் 40 கி.மீ. தூரத்திலுள்ள இகினலூரில், ஒரு தடகளப் பயிற்சி மையத்தை நடத்திவருகிறார். தினமும் பயிற்சி பெறும் அத்லெட்களை பயோளியிலிருந்து இகினலூருக்கு பயிற்சிக்காக அழைத்து வரவேண்டியுள்ளது. இதற்காக இரண்டு வேன்களை, வாடகைக்கு அமர்த்துவதன் மூலம், நிறைய செலவாகிறது என்று உஷா சொன்னதால், டாடா ஸ்டீல் நிறுவனம் நாற்பது சீட்கள் கொண்ட ஒரு சொகுசு பஸ்ஸை, உஷாவின் தடகளப் பயிற்சி மையத்துக்கு வழங்கி இருக்கிறது. ''2012 லண்டன் ஒலிம்பிக்கில், என்னிடம் பயிற்சிபெற்ற ஒருவர், தங்கமெடல் வாங்க வேண்டும் என்பதுதான் என் லட்சியம்'' என்கிறார் உஷா.

**– கௌதம்ராம்**

# புதிய வானம்

ருக்மிணியின் முகத்திலிருந்த கலவரத்தைக் கண்டு பயந்தார் விஸ்வநாதன்.

''என்னம்மா ஆச்சு? எதுக்கு உடனே வரச் சொன்னே?'' - முக்கியமான கிளையண்ட் மீட்டிங்கை ரத்து செய்து வந்திருந்தவர், நடுங்கிய மனைவியின் தோள்களைப் பற்றி அணைத்து ஆசுவாசப்படுத்த வேண்டியிருந்தது.

''ராஜு போய் ஸ்டேஷன்ல கம்ப்ளெய்ன்ட் கொடுத்திருக்கான்... போலீஸ்காரர் வந்தார்... வாசல்படியில் நின்னு பெல் அடிச்சப்போவே அடிவயிறு கலங்கித்து.''

விஸ்வநாதனின் முகம் இறுகியது. படித்துப் படித்து கணவனும் மனைவியுமாகச் சேர்ந்து அவனை எச்சரித்திருந்தனர். 'நடந்ததையெல்லாம் கெட்ட கனவா நினைச்சு மறந்துடு. ஒருத்தர்கிட்டேயும் மூச்சு விட்டுக்காதே!'

சரியென்று தலையாட்டி விட்டுப் போனவன், எதற்காக போலீஸ் ஸ்டேஷன் போனான்? எப்போது? போனதை ஏன் சொல்லவில்லை?

''மார்ச்சுவரிக்கு வந்து பிணத்தை அடையாளம் காட்டச் சொல்றார் போலீஸ்காரர்...!'' ருக்மிணியின் கண்களிலிருந்து நீர் பெருகியது.

''பயப்படாதே. நான் மாதவனுக்கு ஃபோன் பண்றேன்...''

வக்கீல் நண்பன் மாதவனின் செல் ஃபோன், வாய்ஸ் மெயிலில் தகவல் பதிவுசெய்யச் சொல்லிற்று! என்ன சொல்வதென்று புரியாமல், தொடர்பைத் துண்டித்தார் விஸ்வநாதன். தடதடவென்று மாடிப் படிகளில் ஆட்கள் ஏறிவரும் ஓசை கேட்க, பதற்றத்துடன் எழுந்தாள் ருக்மிணி. 'நீ உள்ளே போ' என்று அவளுக்கு ஜாடை காட்டுவதற்குள் அவர்களுடைய மாடி போர்ஷன் நுழைவாயிலில்... ராஜுதான் என்று பார்த்ததும், நின்ற அவர் மூச்சு திரும்பி வந்தது. சமையலறை மறைவுக்குள் நுழையவிருந்த ருக்மிணி வெளிவந்தாள்.

''என்னடா ராஜு! எதுக்கு இப்படிப் பண்ணினே! கொஞ்சமாவது...'' கணவனை முந்திக்கொண்டு அவனைத் தாக்க ஆரம்பித்தவள், பாதியிலேயே வார்த்தைகளை மென்று விழுங்கினாள்.

'ஐயோ! விபரீதமே! இது யார் இந்தப் பெண்? இருக்கிற கவலை போதாதென்று, இவளை வேறு எதற்கு வீட்டுக்கு அழைத்து வந்திருக்கிறான்!'

''வணக்கம் ஆன்ட்டி'' என்று வந்த பெண் கைகூப்பியபோது என்ன பதில் சொல்வதென்று புரியவில்லை.

''உட்காரு கீதா.'' ராஜுவே அவளை வரவேற்பறை சோஃபாவில் அமர்த்தினான். பெற்றோரைப் பார்த்துச் சொன்



னான்: ''கீதாவுக்கு எல்லாம் தெரியும்.''

தலையில் கையை வைத்துக்கொண்டு தொப்பென்று சோஃபாவுக்குள் சரிந்தார் விஸ்வநாதன். ருக்மிணி உறைந்து போனாள். உள்ளே போய், ஃப்ரிட்ஜி லிருந்து தண்ணீர் எடுத்துக்கொண்டு வந்து கீதாவிடம் நீட்டினான் ராஜு.

சீதா ரவி

''தேங்க்ஸ் ராஜு'' என்று வாங்கிக் குடித்தவள், ''இப்போ என்ன ஆயிடுச் சுன்னு இவ்வளவு கலங்கறீங்க?'' என்றாள் அவள் பெற்றோரைப் பார்த்து. அவள் குரலில் வழக்கமாகத் தொனிக்கும்



"தலைவருக்கு தொலைநோக்குப் பார்வை இருக்குதுன்னு எதை வச்சு சொல்றே?"
"2011-ல் வரப்போற தேர்தலுக்குப் பிரசாரம் பண்ண, இப்பவே நடிகைகளுக்கு அட்வான்ஸ் கொடுத்திட்டாரே!"
- என். உஷாதேவி

ஏளனத்துக்குப் பதில், அக்கறையும் ஆதரவும் ததும்புவதாகத் தோன்றியது ராஜுவுக்கு.

''ஆர் யூ ஓ.கே?'' என்றாள் கீதா ராஜுவின் முதுகைத் தடவியபடி. அத்தனை அசௌகரியத்திடையேயும் அவள் தொடுகையால் அவன் உணர்வுகள் சலனப்பட்டது, அவளுக்கு வியப்பைத் தந்தது. அவசரமாகக் கைகளை விலக்கிக் கொள்வதுபோல் செய்யாமல், இயல்பாகவே அகன்று நின்று அவனைப் பார்த்தாள். அம்மாவைத் தவிர வேறெந்தப் பெண்ணையும் அவன் முகத்துக்கு நேராகப் பார்த்திருக்கக்கூட மாட்டான் என்று நினைத்துக் கொண்டாள். தன்னை வீட்டுக்கு அழைத்துப்போய், பெற்றோர் முன் நிறுத்தும் தைரியம்கூட வேறுவழியின்றித்தான் பிறந்திருக்கிறது. அவன் பெற்றோரைச் சமாதானப்படுத்துவதே அவளுக்குப் பெரும்பாடாகத்தான் இருந்தது.

'ஏங்க இப்படிப் பயப்படறீங்க? உங்க மகன் ஒருத்தர் கொலை செய்யப்படறதைப் பார்த்தார் - அதை போலீஸ்ல சொல்லி, கொலையாளியைக் கண்டுபிடிக்க உதவுறதுதானே நியாயம். நீங்க என்னமோ அவரே கொலை பண்ணிட்ட மாதிரி மிரள்றீங்களே!' என்றபோது ருக்மிணி ஓடிவந்து அவள் வாயைப் பொத்தி விட்டாள்.

'அம்மா! பரதேவதை உன் காலை, கையப் புடிச்சுக் கேட்டுக்கறேன்... அந்த வார்த்தையைச் சொல்லாதே... காலம் இருக்கிற இருப்புல நாளைக்குப் போலீஸ் அப்படியே பழியை இவன் மேலே திருப்பினா நாங்க எங்கே போய் நிப்போம்?' என்று புலம்பிய ருக்மிணியைத் தேற்ற வேண்டியதாயிற்று. அவள் அஞ்சுவது போலெல்லாம் நடந்துவிடாது. கல்லூரி மாணவனுக்கு ஒரு குறைந்தபட்ச சமூகப் பொறுப்பு இருக்கவேண்டும் என்று வாதிட்டு, ராஜுவின் பெற்றோரிடம் அவளால் ஜெயிக்க முடியவில்லை. கடைசி ஆயுதமாக, தன் அனுபவத்தையும் ஆற்றலையும்தான் அவள் உத்தரவாதமாக வழங்க வேண்டியிருந்தது.

'ஆமாம். கீதாதான் ஸ்டேஷனுக்கு என்கூட வந்தா; கம்ப்ளெய்ண்ட் எழுதிக் கொடுக்க உதவினா; எஃப்.ஐ.ஆர். போட வைக்க ஒத்தக்கால்ல நின்னுருக்கா...' என்று ராஜுவும் அவளுடைய பிரதாபத்தைப் பேசினான். 'சும்மான்னு நினைக்கா தீங்க! ஷி இஸ் தி டிஸ்ட்ரிக்ட் செக்ரட்டரி

ஆஃப் ஒய்.ஏ.எஸ்.ஏ. - யூத் அஸோஸியேஷன் ஃபர் சோஷல் அவேர்னஸ்...'

'அதனால்தான் அவகிட்டே எல்லாத்தியும் சொன்னியோ?' என்று அவன் அப்பா கேட்டபோது நக்கல் தெறித்தது.

அதற்கு நேரடியாகப் பதில் சொல்லாமல், மார்ச்சுவரிக்கு வரும்படி போலீஸ் அழைத்திருப்பதாகச் சொல்லிவிட்டு அவளுடன் கிளம்பிவிட்டான், பெற்றோரிடம் எதையும் மறைக்கவில்லை என்ற நிம்மதியுடன்.

மார்ச்சுவரியில் அவனுக்குக் காட்டப்பட்ட உடல், அடையாறு ஆற்றோரம் பைனாகுலர் வழியே, அவன் பார்த்த புதர் மீசைக்காரனின் உடல் இல்லை என்கிற அளவுக்கு உறுதிசெய்துவிட்டான். அந்த அனுபவத்தால் ஆடிப் போய், தெருவோரத்திலேயே உட்கார்ந்துவிட்டவனைப் பார்க்கப் பாவமாக இருந்தது அவளுக்கு. முழங்கால்களுக்குள் புதைந்திருந்த தலையை மெள்ள நிமிர்த்தி, ''எங்கிட்டே ஏன் வந்து சொன்னே ராஜு?'' என்றாள். பிணவறைக்குள் நுழைந்து வெளிப்பட்ட அருவருப்பின் தாக்கமும் ஆயாசமும் அவளையும் வாட்டின.

தலையை நிமிர்த்தியவன், அவள் முகம் வெகு அருகே இருக்கக் கண்டு, சற்றுத் தடுமாறினான். இலேசான புன்னகை இதழ்க்கோடியில் விரிந்தது. மனசில் அப்பியிருந்த அருவருப்பு மாயமாய் மறைந்தது. என்ன சொல்வது அவளிடம்? 'தூரத்திலிருந்து உன்னை தினம் தினம் வியந்துகொண்டிருந்தேன்' என்று ஆரம்பிப்பதா? விளக்குக் கம்பத்திலிருந்தபடி சளசளக்கும் மைனாவைப் பார்க்கிறபோது மைக் கம்பத்தின் முன்நின்று நீ பொறிந்து தள்ளுவது நினைவு வரும் என்று சொல்வதா? தவிட்டுக் குருவிக் கூட்டம் பூனையைக் கண்டதும் உயிரே போகிற மாதிரி, வீச் வீச் வீச் சென்று ஒருசேரக் கத்திக்கொண்டு அங்குமிங்கும் படபடத்துக் குதித்து, அலம்பல் பண்ணுமே, அப்போது நீ போடுகிற வீதி நாடகம் ஞாபகம் வரும் என்று சொல்வதா...?



''என்னுடைய பெயரை மாசிலாமணி என்று பொருத்தமில்லாமல் வைத்து விட்டார்கள்.''
''ஏன் அப்படிச் சொல்லுகிறீர்?''
''காசிலாமணி என்று வைத்திருக்கலாம்.''
- வீரசிகாமணி

அதையெல்லாம் இவன் பொறுமையோடு கேட்டுக்கொள்வாள் என்று தோன்றவில்லை அவனுக்கு. ''உன்னை எனக்குப் பிடிச்சிருந்தது; ஸாரி ஸாரி... பிடிச்சிருக்கு அதனால் சொன்னேன், அவ்வளவுதான்'' என்றான் சிநேகிதப் புன்னகையுடன்.

கண்ணிமைக்கும் நேரத்துக்கு அவன் முகத்தில் ஒரு செம்மை படர்ந்து மறைந்தது. இனிய சொற்களால் என்னை வீழ்த்த



தவிட்டுக்குருவிக் கூட்டம் பூனையைக் கண்டதும், உயிரே போகிற மாதிரி, 'வீச்வீச்'சென்று கத்திக்கொண்டு அலம்பல் பண்ணுமே, அப்போது நீ போடுகிற வீதி நாடகம் ஞாபகம் வரும்!

முடியாது என்பது போல், மீண்டும் இறுக்கமாக அவனைப் பார்த்தாள்.

''நம்பமாட்டியே! தெரியும். ஆனா, அன்னிக்கு கார்மரன்ட் கூடுகளைத் தேடி, அடையாறு ஆத்தங்கரை சேத்துல கால் வைக்கறப்போகூட, உன் ஞாபகம் வந்தது. போன வருஷம் வெள்ள நிவாரணப் பணிக்காக பீஹார் போயிருந்தியே, அப்போ நீயும் இந்த மாதிரி சேறு சகதியில நடந்து மழை, வெயில் பார்க்காமதானே சுத்தியிருப்பேன்னு நினைச்சுக்கிட்டேன்....''

''வா, எங்கயாவது போய் டீ சாப்பிடலாம்...''

''எனக்கு வேண்டாம். கார்மரன்ட் கூட்டுக்குப் பதிலா கொலையைப் பார்ப்பேன்னு கனவுல கூட நினைக்கலை... அப்படியே சினிமால வர்ற மாதிரி இருந்தது. வேலிக்காத்தான் புதரை பைனாகுலர் வழியா பார்த்துக்கிட்டேயிருக்கேன், திடீர்னு ஒரு தடியன் அதுக்குள்ளேருந்து வர்றான்... பெரிய மீசை... பின்னாலேயே இன்னொருத்தன் வந்து குத்தறான் நெஞ்சுல... எதால குத்தினான்னு யோசிச்சு யோசிச்சுப் பார்க்கறேன். நினைவுக்குக் கொண்டு வர முடியலை... ஆனா சட்டை முழுக்க ரத்தம். அப்படியே மல்லாக்க தண்ணியில விழுந்தான்...''

''ஷ்... போதும். நடுரோடுல உட்கார்ந்துகிட்டு இதெல்லாம் ஏன்...?''

'' 'ஏன் எங்கிட்டே சொன்னே'னு நீ கேட்டதால எல்லாம் திரும்பவும் ஞாபகம் வந்துடுத்து... அப்பா அம்மாட்ட சொன்னப்போ அப்படியே நடுங்கிப் போய்ட்டாங்க. மூச்சு விடக்கூடாதுன்னுட்டாங்க. எனக்கு ஆறலை கிதா... மறுநாளே நீ பேச்சுப் போட்டியில பேசினது எனக்காகவே பேசின மாதிரி இருந்தது. சமூகத்துல ஒரு தவறு, குற்றம் நடந்தா, நமக்குச் சம்பந்தமில்லேன்னு ஒதுங்கிப் போறது கோழைத்தனம்னு அடிச்சு சொன்னியே... நான் ரொம்ப நேசிக்கிற பறவைகளோட வாழ்க்கையும், எனக்கு அதைத்தானே உணர்த்துதுன்னு நினைச்சுக்கிட்டேன்...''

''போச்சுடா! அங்க சுத்தி இங்க சுத்தி திரும்பவும் ஆரம்பிச்ச இடத்துக்கே வந்தாச்சு! அப்படி என்னதான் இருக்கு உன் பறவை உலகத்துல? என்னையும் ஒருநாள் அழைச்சுட்டுப் போய்க் காட்டேன்...''

''ஓ, யெஸ்!'' உற்சாகத்துடன் எழுந்துவிட்டான். ''இந்தமுறை, எதுக்கும் போலீஸ் ஸ்டேஷன்ல முன்னாடியே சொல்லி வைச்சுட்டுப் புறப்படுவோம்...'' ஜோக் அடிக்கும் அளவுக்கு அவன் மனம் இலேசாகி இருந்தது ஆறுதலளித்தது கீதாவுக்கு.

(தொடரும்)

# அருள்வாக்கு



# பக்தி

மனிதனை விசாரங்களிலிருந்து விடுவித்து உயர்த்துவதற்குத்தான், எல்லா மத சம்பிரதாயங்களும் தோன்றியிருக்கின்றன. மற்ற பிராணிகளுக்கு இல்லாத விசாரம் இவனுக்கு இருப்பது மட்டுமில்லை; இவன் முயற்சி செய்தால் விசாரத்திலிருந்து விடுபடுவதோடு நில்லாமல், மற்ற பிராணி வர்க்கம் எதுவும் அடைய முடியாத ஞானத்தைப் பெற முடியும். உலக விவகாரங்களையெல்லாம் இயக்கி வைக்கிற ஒரு மகா சக்தியிடம் தஞ்சம் புகுந்தாலே, விசாரங்களிலிருந்து விடுபடலாமென்று பொதுவாக இந்த எல்லாச் சித்தாந்தங்களும் ஒரே குரலில், ஏகமனசாகச் சொல்கின்றன. அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம், சைவ சித்தாந்தம், இன்னும் கிறிஸ்துவம், இஸ்லாம்... முதலிய எந்தச் சம்பிரதாயமானாலும் சரி, பக்தி எல்லாவற்றுக்கும் பொது.

பகவான், பக்தன் என்று பிரிந்தே தோன்றுகிற ஆரம்ப ஸ்திதியிலும்கூட, 'பகவானாக எந்தப் பரமாத்மா வந்திருக்கிறதோ, அதுவேதான் பக்தனாகிய நாமாகவும் ஆகியிருக்கிறது' என்ற நினைவைக் கொஞ்சம் ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். இதனால் பகவானிடம் நம் அன்பும் அதிகமாகும். ஏனென்றால் நம்மைவிட நமக்குப் பிடித்தமான, அன்பான வஸ்து இல்லை அல்லவா!

நம் காரியங்கள் அனைத்துக்கும் பலன் தருகிற ஈஸ்வரன், நாம் பக்தி பண்ணப் பண்ண, அதற்குப் பலனாக மேன்மேலும் அவனை நெருங்க அநுக்கிரகம் செய்வான்; தான் யார், எப்படிப்பட்டவன் என்பதையெல்லாம் அவனே தெரியப்படுத்துவான். நாம் அவனை ஆராய்ந்து பார்க்கவேண்டாம். அவனே நம் பக்திக்கு இறங்கி, தன் இயல்பைத் தெரியப்படுத்துவான். கீதையில் பகவான் இப்படியே சொல்லியிருக்கிறார்: ''பக்த்யா மாம் அபிஜானாதி யாவான் யச்சாமி.''

– ஜகத்குரு காஞ்சிகாமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

ஒவ்வொரு முறையும்
உனக்கு முன்னால்
நடந்து போகத்தான்
ஆசைப்படுகிறேன்;

உன்
லட்சக்கணக்கான
நெட்டைக்
கால்களுக்குமுன்
எனது
ரெட்டைக் கால்
நடை
உடைந்து போகிறது!

நாசிபடரும் வாசம்
மொத்தமும் அள்ளி
ஈரலின் அடித்தரை வரை
அப்பிக்கொள்ள வேண்டி
முழு மூச்சையும்
இழுக்க
முயற்சித்தும்
முடியவில்லை;

உனது
சில்லிப்பினூடே
வழிந்து ஓடுகிறது
எனது தோல்விகளும்;

அதெப்படி
மொத்தமாய்
தரை இறங்குகிறாய்!

என்னோடு
சேர்ந்து நடக்க
தனியே வா!
அடி முதல்
நுனி வரை
எனக்கு மட்டுமே
சொந்தமாய்
இருந்து விட்டுப் போ!

ஒரு முறையாவது...
நான்
உன்னை
நனைக்க வேண்டும்;

வெட்கப்படாத
வெளிச்சப் புன்னகையில்
நீ
என்னை
இணைக்க வேண்டும்;

சில்லிப்பின்
ஆழத்தில் இருக்கும்
தீயில்
சிலிர்க்கச் சிலிர்க்க
எரி!

எங்களின்
ஒவ்வொரு
உயிர் திரவத்திலும்
கலந்திருக்கும்
நீ
உபத்திரவம் இல்லாத
உப திரவம்!

# மழையடி வாரம்!

சகா

# வில்லில் தோன்றிய மாதங்கி!

பண்டைத் தமிழரின் கலைத்திறத்துக்குச் சாட்சியாய் விளங்கும் படிமக்கலை, சோழர்களின் காலத்தில் மகோன்னத நிலையை அடைந்தது. ஓர் ஆவேசம் வந்தாற்போல் எண்ணிலடங்காத விக்கிரகங்களை வார்த்து, சாதனை படைத்தது சோழர் காலத்திலேதான். எண்ணிக்கையில் மட்டுமல்லாமல், கலைப்பரிமாணத்தின் உச்சநிலையை அடைந்ததும் சோழர் காலத்திலேதான். இன்றுவரை அந்தப் பாரம்பரியத்தின் தடத்தில் தமிழகக் கலைஞர்கள், கற்பனையை விரிவாக்கி, பல கலைச் செல்வங்களைப் புதியபுதிய பாணியில் படைத்துக் கொண்டே இருக்கிறார்கள். புராண இதிகாஸங்களும், இந்தத் தெய்வீகக் கலைக்கு, ஒரு பரந்த களத்தை ஏற்படுத்தித் தந்திருக்கின்றன. இதுவரை கண்டிராத வகைவகையான தெய்வ வடிவங்களை, இன்று நாம் பார்க்கமுடிகிறது. அவற்றில் ஒன்று சமீபத்தில் கண்ணையும் கருத்தையும் கவர்ந்தது.

ஸ்ரீவித்யா உபாஸனையில், அம்பிகையின் பல்வேறு வடிவங்களை வர்ணிக்கும் தியான ச்லோகங்கள் உள்ளன. அவற்றில் ஒன்று மாதங்கியின் வடிவம். பண்டாசுரனை அழிக்க, சிதக்னி குண்டத்திலிருந்து தோன்றிய லலிதாம்பிகை, தன்னிலிருந்தே சக்தி சேனையைத் தோற்றுவித்தாள். அம்பிகையின் கரும்புவில்லில் இருந்து தோன்றிய சக்தியே மாதங்கி. இவளே லலிதாம்பிகையின் இராஜதானியில் பிரதான மந்திரி; இராஜமாதங்கி, சியாமளா, சுக சியாமளா, கதம்பவன வாஸினி, மந்திரிணி... என்றெல்லாம் இவளுக்குப் பெயர்கள் பல. மதங்க மாமுனிவரின் மாதவச் செல்வியாய் இவள் ஒருமுறை அவதரித்ததால், மாதங்கி.

லலிதாம்பிகைக்கு அடுத்தபடியாக இராஜ்யாதிகாரம் இவள் கையில் என்பதால், இராஜமாதங்கி; சியாமள (கரும்பச்சை) வடிவினளாய் இவள் விளங்குகிறாள் என்பதாலும், கையில் கிளியை (சுகம்) ஏந்தியிருப்பதாலும், சுகசியாமளா; லலிதை வசிக்கும் கதம்ப வனத்திலேயே இவளும் வசிப்பதால், கதம்பவனவாசினி. லலிதையின் பிரதான மந்திரியானதால் இவள் மந்திரிணி.

மதுரை அரசாளும் மீனாட்சி இந்த சுகசியாமளையே! காளிதாசன், மாதங்கியின் அருள்பெற்றே மகாகவியானான். அவன் இயற்றிய 'சியாமளாதண்டகம்' என்னும் ஸ்தோத்திரம் இவளைப் போற்றித் துதிக்கும் தாண்டகமே! 'மாணிக்க வீணாம் உபலாலயந்தீம்; மதாலஸாம் மஞ்சுள வாக்விலாஸாம்' என்று தொடங்கும்

த.கி. நீலகண்டன்

## அருளின் வடிவே...

சியாமளா தண்டகத்தின் சொற்களை வைத்தே, கவியரசர் கண்ணதாசனும், 'மாணிக்க வீணையே மரகதப் பதுமையே' என்று தொடங்கும் பாடலை, 'மகாகவி காளிதாஸ்' என்ற திரைப்படத்துக்கு எழுதித் தந்தார். கவிஞர்களுக்குக் கவித் தன்மையையும், பேச்சாளர்களுக்கு வாக்குவன்மையையும், இசைக் கலைஞர்களுக்கு இனிய இசை ஞானத்தையும் அருளும் தேவி இவள்.

சரஸ்வதி தேவியைப் போலவே, இவளும் வீணாபுஸ்தக தாரிணியாய்க் கோலம்கொண்டவள்; வாக்குக்கும் எழுத்துக்கும் அதிபதியானவள்; இசைக்கும் கலைக்கும் ஆதார சக்தியானவள். ஆனால், சரஸ்வதிக்கும் இவளுக்கும் ஒரு சிறு வித்தியாசம். சரஸ்வதி, உலகாயதத்துக்கு வேண்டிய, சாமான்ய அறிவைத் தருபவள். அசாதாரண ஞானத்தை (extra-ordinary knowledge) உள்ளுணர்வால் அறியத்தக்கதைச் சாத்யமாக்குபவள்



17

இராஜமாதங்கி.

மரகதப் பச்சை நிறத்தினளாய், செம் பட்டு ஆடை உடுத்தி, கதம்ப மலர்களால் ஆன மாலை சூடி, சந்திரகலையைச் சிரசில் தரித்து, சங்கினால் ஆன தோடுகளும், முத்துவடங்களும், சுவர்ணாபரணங்களும் அணிந்து... காட்சி தருவதாக இந்த அம்பிகையை, தியான சுலோகங்கள் வர்



ணிக்கின்றன. இந்தத் தேவியின் அழகிய வடிவை, தற்காலச் செப்புப்படிமம் ஒன்று நம் கண்முன் கொண்டு நிறுத்துகிறது. இந்த அம்பிகை 'பத்ராஸனம்' என்று வழங்கும் உயர்ந்த சதுரமான பீடத்தில், இடதுகாலை மடித்து, வலது காலைத் தொங்கவிட்டவாறு, அமர்ந்த கோலத்தில் காட்சி தருகிறாள். எட்டுத் திருக்கரங்கள். இரண்டு கைகள் மாணிக்க வீணையை ஏந்தி இசைத்தவண்ணம் இருக்க, மற்ற ஆறு திருக்கரங்களில் கமண்டலம், புத்தகச் சுவடி, பாசம், அங்குசம், தாமரை மலர், நெற்கதிர்... ஆகியவற்றை ஏந்தி காட்சி தருகிறாள். அவள் ஏந்தியிருக்கும் தாமரை மலர் மீது அமர்ந்து, அவள் பொழியும் வீணா கானத்தைக் கேட்டு ரசித்தவாறு இருக்கிறது அழகிய கிளி ஒன்று!

மிக நேர்த்தியாக வடிவமைக்கப்பட்ட இந்த விக்ரகத்தில், நுணுக்கமான வேலைப் பாடுகளுடன் விளங்கும் அணிமணி ஆபரணவகைகள், அழகுக்கு அழகு சேர்க்கின்றன. கழுத்தில் அட்டிகை, காசு மாலை, முத்துவடம், பதக்கம், தோள்களில் பாகுவலயங்கள், தோள் வளைகள், வங்கி

**இராஜ மாதங்கியை உபாஸிப்பவர்கள், இசைக் கச்சேரிகளின்போது இடையில் எழுந்து போவதும், பாடகர்களை நிந்திப்பதும் கூடாதாம்!**

கள், கைகளில் கடகங்கள், பாதங்களில் தண்டை கொலுசு, காதுகளில் மகரக் குழைகள், சிரசில் கரண்ட மகுடம், மெல்லிய இடையில் ஒட்டியாணம்... என்று வகை வகையான ஆபரணங்கள். முகத்தின் புன்னகையில் தவழும் அமைதி; அமர்ந்திருக்கும் கோலத்தில் ஒரு மென்மை; கைவிரல்களில் ஒரு நளினம்; இசையில் லயித்திருக்கும் கண்களில், ஒரு வகையான லயிப்பு... என்று இவளே ஓர் இசை வடிவாய்த் திகழ்கிறாள்.

இவளை உபாஸிப்பவர்கள் முக்கியமாகக் கவனிக்கவேண்டியது ஒன்று உண்டு. இசைக் கச்சேரிகளின்போது இடையில் எழுந்து வெளியே செல்வதும், பாடகர்களை நிந்திப்பதும், அலட்சியம் செய்வதும் கூடாதாம்!

(பெருகும்)

ஸ்ரீ சுவாமி நாத சுவாமி சஹாயம்

ௐ

**இந்தியாவின் சிறப்புமிக்க முன்னணி ஸ்தாபனம்**

SGS

## Sri Gomathi Sankar Catering Service

## ஸ்ரீ கோமதி சங்கர் கேட்டரிங் சர்வீஸ்

**Master Cook Catering Contractors**



சமையல் சக்கரவர்த்தி

மாம்பலம் **G. சங்கர் ஐயர்**

**பாரதம் முழுவதும்**

15/6, Nayakkamar Street, Near Postal Colony, West Mambalam, Chennai - 600 033.

**Ph: 2371 2318 Cell: 98411 13559, 93810 53924, 2483 2334 (R)**

---

# ஆன்மீக உலகில் ஓர் அற்புதம்!



ஆன்ம சக்தியை அழித்து, அறிவின் திறனை குறைத்து, மனவலிமையை தகர்த்து, நிம்மதியைக் குலைத்து, வலிவை பாழாக்கி, ஆரோக்யத்தைக் குறைத்து, குடும்பத்தில் குழப்பம், தொழிலில் நஷ்டம், உத்தியோகத்தில் பிரச்சனை, கல்வியில் தோல்வி, காதலில் வீழ்ச்சி போன்ற காரியங்களை பில்லி, சூன்யம், ஏவல் இவற்றால் தீமை உண்டாகின்றன.

விண் மட்டும் விஞ்ஞானம் வளர்ந்த போதும், இவைகளுக்குத் தீர்வு அருள் மறையில் மாத்திர முண்டு. இந்தக் குறைகளை நீக்கி எல்லாத் துறையிலும் வெற்றி பெறச் செய்கிறார் மாபெரும் தவச்சீலர் மறையகம் பாபா. உடனே அணுகவேண்டிய முகவரி:

அருள்

# மறையகம்

1 B, மகாலட்சுமி அப்பார்ட்மெண்ட், நெ.3, அப்துல் ரசாக் தெரு, நூர்ஜஹான் தியேட்டர் எதிரில் (தற்போது ராஜ் தியேட்டர் என்று மாற்றப்பட்டுள்ளது), சைதாப்பேட்டை, சென்னை - 600 015.

☎ : 2435 1190, 2433 2047. செல்போன் : 98404 11551

குறிப்பு : வெளியூர், வெளிநாடுகளில் வசிப்பவர்கள் தங்கள் பிரச்சனை தீர்க்க தங்கள் பெயர், தங்கள் தாயார் பெயருடன் தங்கள் பிரச்சனைகளை எழுதி, ரூ. 10 (ரூ) அதற்கான அஞ்சல் தலையுடன் அனுப்பி வைத்து ஆலோசனை பெறவும்.




# பெருநாள்

அண்ணாநகர், மேற்கு டிப்போவில் பஸ்ஸிலிருந்து இறங்கி, தங்கச்சி வீட்டுக்கு நடக்கிற வழியில், ஒரு மீடியம் சைஸ் மிட்டாய்க் கடையில், அரைக்கிலோ ஸ்வீட்ஸ் வாங்கிக்கொண்டேன். ஐம்பது ரூபாய் அவுட்.

நம்ம தரித்திரத்துக்கு இது ஆடம்பரச் செலவுதான். சரி அதற்கென்ன செய்ய, சின்னப் பிள்ளைகள் மூணு இருக்கிற வீட்டுக்குக் கையை வீசிக் கொண்டுபோய் நிற்க முடியுமா!

என்னைப் பார்த்ததும், ''மாமா வந்துட்டாங்க... மாமா வந்துட்டாங்க'' என்று குழந்தைகள் குதூகலமடைந்தன.

கடைக்குட்டியின் கையில் மிட்டாய்ப் பெட்டியைக் கொடுத்தது, அவர்களைப் பெரிசாய், சந்தோஷப்படுத்திவிடவில்லை.

''மாமா பெருநாக்காசு, மாமா பெருநாக்காசு'' என்று பிடுங்கியெ

# ஏ.ஏ.ஹெச்.கே.கோரி

டுத்த பிள்ளைகளிடமிருந்து, தங்கச்சி வந்து என்னைத் தடுத்தாட்கொண்டாள்.

''புள்ளைங்களா, வந்தவொடனேயே மாமாவைத் தொந்தரவு பண்ணப்படாது. பெருநாக்காசெல்லாம் மாமா தருவாக. இச்சன்ல போய் பிரியாணி ஆயிருச்சான்னு பாருங்க. மாமா பசியோடயிருப்பாக'' என்று பிள்ளைகளைத் திசைதிருப்பிய தங்கச்சி, என்னை வரவேற்றாள்.

''வாங்கண்ணே, காலைல நாஷ்டாவுக்கு வந்துருவீகன்னு பாத்தேன்.''

''நாஷ்டாவா? அதயெல்லாம் நான் மறந்து போய் ரொம்ப நாள் ஆச்சும்மா'' என்று சிரித்தேன்.

''அப்படியெல்லாம் பேசாதீகண்ணே, நீங்க என்ன இப்படியேவா இருந்துரப் போறீக. எல்லாம் சரியாப் போயிரும்'' என்று தங்கச்சி, எனக்கு நல்ல வார்த்தைகள் சொல்லிக்கொண்டிருந்தபோது, பெட்ரூமுக்குள்ளிருந்து வெளியே வந்தார் மச்சான்.

''ஈத்முபாரக் மொதலாளி! வாங்க, இப்பத்தான் வந்தியளாக்கும்?''

''மொதலாளி என்ன மச்சான் மொதலாளி! கிண்டல்தானே இது!''

''அல்லா, கிண்டலெல்லாம் கெடையாது மொதலாளி. என்னைக்கு இருந்தாலும் நீங்க எங்களுக்கெல்லாம் மொதலாளிதான். திரும்பவும் நீங்க யாவாரம் தொடங்கி, ஒஹோன்னு வரணும்னுட்டுத்தானே நாங்க நெதம் அஞ்சுநேரம் தொழுகையில அல்லாட்ட 'துஆ'க் கேட்டுட்டிருக்கோம் மொதலாளி.''

''ஆமீன். ஒங்க 'துஆ' பலிக்கட்டும் மச்சான்.''

''சரி, பெருநாத் தொழுகைக்கு எங்க போனீக?''

''வூட்டுக்குப் பக்கத்துல பள்ளி இருக்குல்ல அங்ஙனயே தொழுதுக்கிட்டேன். பிரியாணி வாசம் ஆளத் தூக்குதே மச்சான்! பயங்கரப் பசி. சாப்ட்டுட்டே பேசுவோமே.''

''அதுவும் சரிதான். நீங்க நாஷ்டா பண்ணாத ஆசாமி. சீக்கிரம் சாப்பாடு வைக்கச் சொல்லுவோம்.''

டைனிங் டேபிளைச் சுற்றி மச்சான், தங்கச்சி, பிள்ளைகள், நான்... எல்லோரும் உட்கார்ந்து, மட்டன் பிரியாணியையும் சிக்கன் ஃப்ரையையும் ஒரு கை பார்த்துக்கொண்டிருக்கும்போது, ''மாமா, நீங்க பெருநாளைக்குப் புது டிரஸ் எடுக்கலியா? எங்களுக்கெல்லாம் வாப்பா ரெண்டு ரெண்டு செட் எடுத்துக் குடுத்தாங்க'' என்று ஒரு வாண்டு சொன்னதற்கு, ''ஒங்களுக்கெல்லாம் வாப்பா இருக்காக. எனக்கு டிரஸ் எடுத்துக் குடுக்க யார் இருக்கா கண்ணு?'' என்றேன்.

''நான் ஒங்கட்ட சொல்லணும்னு நெனச்சிட்டிருந்தேன். மறந்தே போச்சுங்க. அண்ணனுக்கு ஒரு பான்ட் ஷர்ட் எடுத்திருக்கலாம்'' என்று தங்கச்சி வருத்தப்பட்டதற்கு, ''நீ ஒண்ணும்மா, நான் என்ன சின்னப் புள்ளையா?'' என்று நியாயம் பேசினேன்.

''அப்ப, நாங்க மட்டும் என்ன சின்னப் புள்ளைங்களா?'' என்று மறுப்பு வெளியிட்டார் மச்சான்.

''ஒங்க ஸிஸ்டரும் சொல்லல; எனக்கும் தோணல பாருங்க மொத

# காசு!

லானி.''

## **பு**து டிரஸ்!

தோள்பட்டையில் ஃப்ளாப் வைத்து, நானே டிஸைன் செய்த கலர்கலரான, வித்யாசமான சட்டைகளை இன் செய்து கொண்டு, மாட்ச்சிங்காய் டை கட்டிக் கொண்டு, கைகளைப் பின்னால் கட்டிக் கொண்டு வளைய வருவேன்; என்னு டைய பிரம்மாண்டமான கடைக்குள்ளே... நிஜமாகவே நான் முதலாளியாயிருந்த வசந்த காலத்தில். இப்போது, பிஸினஸ் போச்சு, கடையை மூடியாச்சு. டை கட்டி அசத்தின காலமெல்லாம் காலாவதி யாகிப் போச்சு.

''**எ**ன்ன மொதலாளி, என்ன யோசனையா இருக்கீக'' என்று என்னை உசுப்பிவிட்ட மச்சானை, ''பிரியாணி ரொம்ப டாப் மச்சான், ரசிச்சுரசிச்சுத் தின்னுட்டிருக்கேன்'' என்று சமாளித் தேன்.

''பிரியாணியப் போட்டு வயித்த நெறப்பிராதீகண்ணே, டெஸர்ட்டுக்குக் காரமல் ஃபுட்டிங் இருக்கு. மறந்துராதீக'' என்று சிரித்தாள் தங்கச்சி.

''இன்னொண்ணையும் மறந்துராதீக மாமா'' என்று நினைவுபடுத்தியது ஒரு சின்னக் குரல்.

''பெருநாக் காசு!''

''ஷ்ஷ்'' அடக்கினாள் தங்கச்சி.

''சாப்புடும்போது யாரும் பேசப் படாது.''

''அப்ப நீங்க பேசறீக?''

''நாங்க பெரியவங்க பேசலாம். சின் னப் புள்ளைங்க பேசப்படாது.''

## **பெ**ருநாள் காசு!

நாங்கள் சின்னப் பிள்ளைகளா யிருந்த காலத்தில் பெருநாக்காசு என்று ஐம்பது பைசா கிடைத்தால் அபூர்வம்.

வீட்டுக்கு விருந்தாளிகள் நிறைய பேர் வந்தால், ஒரு ரூபாய் வரை தேறும்.

ஸ்ரீவைகுண்டத்திலிருந்தபோது, வாப்பாவுக்குத் தெரிந்த ஒரு ஹாஜி யார் ஈத் அன்று வீட்டுக்கு வந்தவர், புத்தம்புது ரெண்டு ரூபாய்த் தாள் ஒன்றைக் கொடுத்துப் புளகாங்கிதப் படுத்திவிட்டார் என்னை.

அதில் ஒரு ரூபாய்க்கு நான் வாடகைக்கு சைக்கிள் எடுத்து, பின் சக்கரத்தில் பலூன் கட்டிக்கொண்டு,



மோட்டார் சைக்கிள் மாதிரி 'டப டப' என்று ஒலியெழுப்பியபடி பள்ளிவாசலையும் கோயிலையும் சுற்றிச்சுற்றி வந்தது நினைவிலிருக்கிறது.

ரெண்டு ரூபாயைப் பார்த்தது ஸ்ரீவைகுண்டத்திலென்றால், அஞ்சு ரூபாய் நோட்டை முதன்முதலாய் முழுசாய்ப் பார்த்தது, பாளையங்கோட்டையில் சித்தி கல்யாணத்தில். சித்தியின் சகோதரர்களெல்லாம் சித்தி சித்தியின் சகோதரர்களெல்லாம் அக்காவைவிட மூத்தவர்களானதால், அக்காவை விட மூத்தவர்களானதால், மாப்பிள்ளை மகனான எனக்கு அடித்தது, மாப்பிள் மகனான எனக்கு அடித்தது,

மாற்றி, அதில் பாதியை அக்காவுக்குத் தந்தேன். மீதி ரெண்டரை ரூபாயில், அசோக் டாக்கீஸுக்குப் பக்கத்திலிருந்த வாப்பாக் கடையில், அரையணா ஆம வடையாய் வாங்கித் தின்பேன். இப்படியே கிட்டத்தட்ட ஒரு மாசத்துக்குத் தினந்தினம் கான்வென்ட் விட்டு வந்ததும் தின்று தீர்த்தது ஒரு மலரும் நினைவு.

**வா**ப்பாக்கடையை நடத்திக்கொண்டிருந்த சகோதரர்கள் அந்தக் காலத்துத் திராவிட இயக்கத்தின் ரசிகர்கள்.

கடைக்குள்ளே அண்ணா, நெடுஞ்செழியன், கருணாநிதி, என்.வி.என்., சத்தியவாணிமுத்து, அன்பழகன், மதியழகன்... என்று வரிசையாய் இளந் திராவிடத் தலைவர்கள் படங்கள் மாட்டியிருக்கும்.

அதோடு, திராவிட நடிகர் கே.ஆர். ராமசாமியின் 'சொர்க்க வாசல்' ஸ்டில்லும் ஃப்ரேம் போட்டுத் தொங்கும்.

வாப்பாக் கடை மட்டன் சுக்காவின்

"**பா**டகனாக வேண்டும் என்ற கனவோடு பட்டணம் வரும் ஒருவனை, அது எவ்வாறு பந்தாடுகிறது என்பதுதான் 'என் காதல் தேவதை' படத்தின் கதை. காதலும் மோதலுமென படத்தைத் திரைப்படுத்தியதில் எங்கள் குழுவுக்குப் பயங்கரத் திருப்தி. அபினு என்கிற புதுமுகம் இப்படத்தில் ஹீரோவாக அறிமுகமாகிறார். அவருக்கு இந்தப் படம் மிகப் பெரிய திருப்புமுனையாக இருக்கும். இயக்குநர் கனவுகளோடு குடியாத்தத்திலிருந்து சென்னைக்குக் குடிபெயர்ந்த எனக்கு, சினிமாவுக்கான கதவைத் திறந்துவிட்டது சுந்தர் கே.விஜயன்தான். இயக்குநர் கணக்கு நான் போட, காலம் வேறொரு கணக்குப் போட்டு ஸ்டண்ட் மாஸ்டராய் களத்தில் இறக்கியது! கனல் கண்ணன் போன்ற ஸ்டண்ட் மாஸ்டர்களை உருவாக்கினேன் என்ற திருப்தியோடு, இப்போது என் காதல் தேவதையை இயக்க வந்திருக்கிறேன். இசைப்புயல் ஏ.ஆர். ரஹ்மானின் சிஷ்யன் கபலீஸ்வரனின் இசையில் இனிமையான பாடல்கள் வந்திருக்கின்றன. எடிட்டிங் முடிந்து பொங்கலுக்கு 'என் காதல் தேவதை' உங்கள் மனசுக்குள் மையமிடுவாள்" என்கிறார் இயக்குநர் அமிதாப்ராஜ்.

ளைக்குக் கால் நனைத்துவிடுகிற அதிர்ஷ்டம். அப்போதுதான் ஐந்து ரூபாய்த் தாள் ஒன்று கைமாறி, என்னைத் திக்குமுக்காட்டி விட்டது.

அந்த அஞ்சு ரூபாயைச் சில்லறை

நறுமணத்தை இப்போது நினைத்துப் பார்த்தாலும் நாக்கில் நீர் ஊறுகிறது.

அசோக் டாக்கிஸெல்லாம் இப்ப மூடியாச்சு என்று சொன்னார்கள். வாப்பாக் கடைகூட இப்போது இருக்கிறதோ இல்லையோ?

பாளையங்கோட்டைப் பக்கம் போயே பத்து வருஷங்களுக்கும் மேலாச்சு.

சரி, அம்பது பைசா ஒரு ரூபாய், ரெண்டு ரூபாய் பெருநாக்காக பெரிசாய்த் தெரிந்ததெல்லாம் நம்ம பள்ளிப் பருவத்தில்.

இப்போது, இந்தக் குழந்தைக்குப் பெருநாக்காக தர வேண்டுமென்றால், தலா அம்பது ரூபாயாவது தர வேண்டும். மூணு இண்ட்டு அம்பது, நூத்தியம்பது. அல்லா, செத்தேன். பாக்கெட்டில் நாப்பது நாப்பத்தஞ்சு ரூபாய் இருந்தால் அதிகம்.

நம்ம கடை ஓஹோவென்றிருந்த காலத்தில், இந்தக் கடைக்குட்டி மட்டும் பிறந்திருக்கவில்லை. பெரிய பிள்ளைகள் ரெண்டும் சர்வசுதந்திரத்துடன் கடைக்குள்ளே புகுந்து, விளையாட்டுச் சாமான்கள் என்ன, காமிக்ஸ் என்ன, சாக்லெட் பார்கள் என்ன என்று மாமாக் கடையிலிருந்து அள்ளிக் கொண்டு போனதுண்டு.

இப்போது நான் அதலபாதாளத்தில் விழுந்து கிடப்பது இந்தப் பிஞ்சுகளுக்குப் புரிந்திருக்க நியாயமில்லை.

புரியாமலேயிருப்பது நல்லது. ஆனால் இன்னொரு தரம், 'மாமா பெருநாக்காக' என்று இதுகள் வாயைத் திறந்தால், நான்



**உட்கார்ந்திருக்கவும் கிளம்பவும் தைரியமில்லாமல் நான் தவிப்புடன் இருந்தேன்!**

ரொம்ப அசிங்கப்பட்டுப் போவேனே, அல்லா. உண்ட மயக்கத்தில் இதுகள் உறங்கப் போயிடாதா? போகவில்லை.

சினிமாவில் 70 எம்.எம். இருக்கிற மாதிரி டெலிவிஷனிலும் 70 எம்.எம். இருக்கிறதோ என்று ஆச்சர்யப் படுகிற மாதிரி, அகன்ற எல்.ஸி.டி. திரையில் என்னமோ ஒரு 'மிஸ்டர் பீன்' காமெடி ஓடிக்கொண்டிருந்தது.

உட்கார்ந்திருக்கவும் இருப்புக்கொள்ளாமல், கிளம்பவும் தைரியமில்லாமல் நான் தவிப்புடன் இருந்தேன்.

எப்படியும் கிளம்பத்தான் வேண்டும்.

குழந்தைகளின் விழிகள் டெலிவிஷன் திரையில் பதிந்திருக்க, ''நான் கௌம்பறேம்மா'' என்று செய்கையால் உணர்த்தினேன் தங்கச்சிக்கு.

ஸோஃபாவிலிருந்து எழுந்து கொண்ட அவள், ''அண்ணே, இப்படிக் கொஞ்சம் வாங்களேன்'' என்று என்னை கிச்சனுக்கு வழி நடத்திப்போனாள்.

போனவள், ''அண்ணே, ஒண்ணும் தப்பா நெனச்சுக்கிராதீ கண்ணே!'' என்று நூறு ரூபாய்த் தாள்கள் மூன்றை என்னுடைய கைகளில் திணித்தாள். ''பெருநாக்காகன்னு சொல்லி, அதுக மூணுங்க கையிலயும் ஆளுக்கொரு நோட்ட நீங்க குடுத்த மாதிரி, குடுத்துட்டுப் போயிருங்கண்ணே'' என்றாள்.

○

# காதைக் கொடுங்க!

● சமீபத்தில் வைகோ புழல் சிறையில் இருந்தபோது மூன்று, நான்கு அறிக்கைகள் வெளிவந்துள்ளன. ம.தி.மு.க.வின் தலைமை நிலைய செயலாளரான வழக்கறிஞர் கே.எஸ்.ராதாகிருஷ்ணன், வைகோ கருத்துக்களை அறிக்கையாக வெளியிட்டார். இதைக் கவனித்து வந்த முதல்வர், ''முன்பு அ.தி.மு.க. ஆட்சியில் நான் இரண்டு நாட்கள் 'உள்ளே' இருந்தபோது, என் பெயரில் அறிக்கைகள் வெளியிடக்கூடாதென்று அப்போது தி.மு.க.வில் இருந்த இதே ராதாகிருஷ்ணன் சொன்னார். இப்போது மட்டும் வைகோவின் கருத்துக்கள் எப்படி அறிக்கைகளாக வருகின்றன?'' என்று புழல் ஜெயில் அதிகாரிகளிடம் விசாரிக்கச் சொன்னாராம்.

● திராவிட இயக்க மூத்த பிரமுகர் இரா. செழியன் ஒரு புத்தக வெளியீட்டு விழாவில் பேசும்போது, அதே விழாவில் கலந்துகொண்ட ஐ.ஏ.எஸ். அதிகாரி சிவகாமியைக் குறிப்பிட்டு, 'அரசியலுக்கு வரலாமே' என்ற கருத்தைச் சொன்னார். அது உண்மையாகிவிடும் போலிருக்கிறது. எல்லா மாநிலங்களிலும், பகுஜன் சமாஜ் கட்சியைப் பலப்படுத்தும் முயற்சியில் இறங்கியுள்ள மாயாவதி, இந்த அதிகாரியை அரசியலுக்கு அழைக்கத் தூண்டில் போடுகிறாராம். திருமாவளவனைக் கைகழுவிய செல்வத்துக்கு, தி.மு.க.வில் சேர ஆசை. ஆனால், திருமாவைப் பகைத்துக்கொள்ள கருணாநிதி தயாராக இல்லை. எனவே, செல்வமும் மாயாவதியைச் சரணடையக் கூடும்.

● கோட்டையில் அன்றாடம் முதல்வர் கலந்துகொள்ளும் நிகழ்ச்சிகளில், ஆற்காடு வீராசாமி பெரும்பாலும் காட்சியளிப்பார். ஆனால், சமீபகாலமாக அவர் கொஞ்சம் அடக்கி வாசிக்கிறாராம். மீடியாவில் முதல்வருடன் ஆற்காட்டைப் பார்க்கும் மக்கள், மின்சாரவெட்டுக் காரணமாக, ஒட்டுமொத்த தி.மு.க. ஆட்சியையும் சேர்த்துக் கடுகடுப்பதால், ஆற்காட்டார் அவ்வப்போது மீடியா வெளிச்சத்திலிருந்து தலைமறைவு ஆகிவிடுகிறாராம்.



## அடக்கி வாசிக்கும் ஆற்காட்டார்!

● இந்திய கம்யூனிஸ்ட் கட்சி அம்மாவுடனும், மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தே.மு.தி.க.வுடனும் கூட்டணி அமைப்பது கிட்டத்தட்ட உறுதியாகிவிட்டதாம். 'காங்கிரஸ் தி.மு.க.வுடன் சேர்ந்துதான் தேர் தலைச் சந்திக்கப்போகிறது' என்று சோனியா தெளிவாகச் சொல்லிவிட்டதால், சில காங்கிரஸ் கோஷ்டிகள் குழம்பிப்போய் நிற்கின்றன.

- ஸ்ரீநி




# ஒரு ஜோடி...

மணிக்கு 161 கிலோமீட்டர் வேகத்தில் இனி, கார் ஓட்டலாம். இது சாத்தியமா என்று யோசிக்கிறீர்களா? ஆமாம், காற்றில் கார் ஓட்டினால், மணிக்கு 241 கிலோமீட்டர். ஒன் லைனில் சொன்னால் பறக்கும் கார் ரெடி.

இங்கிலாந்தின் மோவெர் இன்டர்நேஷனல் நிறுவனம், இந்தக் காரை உருவாக்கி இருக்கிறது. காரில் பொருத்தப்பட்டிருக்கும் எட்டு காற்றாடிகளின் உதவியோடு, நின்ற இடத்திலிருந்து கார் எம்பிப் பறக்க ஆரம்பிக்கும். இஷ்டத்துக்கு இடமும்வலமுமாய்த் திசை மாறவும் முடியும். ஐந்தாயிரம் அடி உயரம் வரை பறப்பதற்கு உறுதியான உத்திரவாதம் உண்டு.

'பெர்ராரி 599 ஜிடிபி' என்ற இந்த மாடல் கார், இன்னும் இரண்டே ஆண்டுகளில் சந்தைக்கு வரப் போகிறது.

விலை கொஞ்சம் அதிகம். ஐந்து லட்சம் அமெரிக்க டாலர்கள்.

சிக்னலில் சிவப்பு விளக்கைக் கண்டாலே எரிந்துவிழுபவர்கள், இந்தக் காரை வாங்கிவிட்டால் இமைக்கும் நேரத்தில் எல்லா சிக்னல்களையும் தாண்டிப் போகலாம்.

அதுசரி... இந்தியாவில் பறக்கும் காருக்கு அனுமதியளிப்பார்களா?

• • •

பூட்ஸ் என்ற நிறுவனம், இங்கிலாந்துப் பெண்களிடையே நடத்திய ஆய்வில், அவர்களின் பதினான்கு வயது தொடங்கி வாழ்நாள் வரைக்கும், சராசரியாக இருபத்தாறு தடவைகள் தோற்றத்தை மாற்றிக்கொள்வதாகச் சொல்லியிருக்கிறார்கள்.

நடை, உடை மற்றும் கூந்தல் அளவுகளில் மாற்றங்கள் செய்துகொள்வது தன்னம்பிக்கையைத் தக்கவைத்துக்கொள்ளத் தானாம்.

வாழ்வில் விரக்தியுற்றுச் சோர்ந்துபோகும் சூழலில், உடைகளின் வடிவமைப்பிலோ, ஹேர் ஸ்டைலிலோ ஒரு சின்னத் திருத்தத்தை மேற்கொள்வது, உளவியல் ரீதியிலும் உருப்படியான யோசனைதான்.

பெண்களிடமிருந்து ஆண்கள் கற்றுக்கொள்ள, எப்போதும் ஏதாவதொன்று இருந்துகொண்டுதான் இருக்கிறது.

• • •

ஒரு பெண்ணை, ஓர் ஆண் எத்தனை

## நியூஸ் ஸ்டேஷன்

# ஆறு கல்யாணம்!

தடவை திருமணம் செய்துகொள்ளலாம்?

என்னய்யா இது கேள்வி என்று கேட் காதீர்கள். அறுபதாம் கலியாணத்தையும் சேர்த்துக்கொண்டால், இரண்டு தடவை என்றுதான் நம்மால் பதில் சொல்ல முடி யும்.

இங்கிலாந்தின் காதல் ஜோடியான கென்னத் லண்ட், அனட் இருவரும் ஆறுதடவை திருமணம் செய்துகொண் டிருக்கின்றனர்.

"'ஒவ்வொரு ஆண்டும் நாம் திருமணம் செய்து கொள்ளலாமா?' என்று என்னிடம் கென்னத் கேட்டார். அந்த ஐடியாவுக்கு உடனே நான் ஓ.கே. சொல்லிவிட்டேன். வருஷாவருஷம் புதுத் துணி வாங்கி, பூ வாங்கி, புகைப்படமும் எடுத்துக்கொள்கிற எண்ணம் யாருக்குத்தான் வரும்?'' என்று பூரித்துப் புளகாங்கிதம் அடைந்திருக்கிறார் மணப்பெண் அனட்.

ஏற்கெனவே இரண்டு தடவை திருமணம் செய்துகொண்டிருக்கிற இந்த காதல் ஜோடி, இந்த வருஷம் ஒரே நாளில் நான்கு தடவை திருமணம் செய்து உலக சாதனை நிகழ்த்தியிருக்கிறது.

முதலில் நட்சத்திர ஹோட்டலில்; இரண்டாவதாக ஆடம்பரமான காரில்; மூன்றாவதாக ஹெலிகாப்டரில்; நான்கா வதாக வானத்திலிருந்து பாராசூட்டில் டைவ் அடித்தபடி.

"நான் முழுக்கப் பரபரப்பாக இருந்தது. ஆனாலும் அது முக்கியமல்ல. ஓர் ஆண் என் மீது எவ்வளவு அன்பாக இருக்கிறார் என்பதுதான், எனக்கு முக்கியம்'' என்று படபடப்பாகப் பேசித் தீர்த்த அனட்டுக்கு, ஏற்கெனவே இன்னொருவரோடு திரு மணம் நடந்தது. அது பாதியில் முறிய, இரண்டாவது கணவருடன்தான் இப்படி 'லாலாலா' பாடிக்கொண்டிருக்கிறார்.

• • •

மலேசியாவின் இஸ்லாமிய மதகுரு மார்கள் ஒன்றுகூடி, யோகாவுக்கு ஃபத்வா வழங்க முடிவெடுத்திருக்கிறார்கள்.

கேபன்கசன் பல்கலைக்கழகத்தில் சமீ பத்தில் நடந்த சமயச்சொற்பொழிவு ஒன்றில், இதற்கான ஆலோசனைகள் நடந் திருக்கின்றன.

யோகாவின் மீது இஸ்லாமியர்களுக்கு என்ன கோபம்? யோகாவைப் பயிற்சி செய்பவர்களின் மனநிலை மாறி மத நம்பிக்கை விலகிவிடுமாம்.

அவர்களின் பயம் நியாயமானதுதான். உடலை, மனசை ஒருமுகப்படுத்தி உள் ளொளி பெறுபவனுக்கு, கடவுளும் கிடை யாது, மதமும் கிடையாது; அவனே இறை வன் என்பதுதான் இந்தியாவின் தத் துவ மரபு.

- ஸாந்த்



# கல்லூரிச் சாலை



‘டேக் ஒன், டேக் டூ, ஓ.கே’ என்று வருங்கால கோலிவுட்டில்
பயின்றுகொண்டிருக்கும் தரமணி எம்.ஜி.ஆர். அரசு திரைப்பட மற்றும்
அங்கு நாம் சென்றபோது, இளம் மாலை கலைடாஸ்கோப்பாய்
"எல்லா அம்மா அப்பாக்களும் பசங்கள, 'படி, சும்மா சினிமா
ஆனா எங்க விஷயத்துல தலைகீழ். நிறைய சினிமா
சினிமா பார்க்கறது பத்தி அவங்களால ஒண்ணுமே
ஆனந்த். "அதுமட்டுமா ஒருநாள் காலேஜுக்கு
தியேட்டர்ல போய் சினிமா பார்த்துட்டு
சார் ஒண்ணுமே சொல்ல
காட்டுகிறார்.
"நான்கூட,

சுட்டிருந்தேன். ஆனா, இங்கேயும் ஏகப்பட்ட புக்ஸ் படிச்சுதான் ஆகணும்''என ஏக்கமாகச் சொல்கிறார் கார்த்திகேயன். ''ஆனாலும் தினமும் பாடத்தோட பாடமா குறைந்தபட்சம் ஒரு சினிமாவாவது பார்த்துடுவோம்'' எனப் பரவசமானார் நித்யானந்தம்.

''சூப்பரா ஜில்லுன்னு ஏ.ஸி.லே படம் பார்க்கற அனுபவமே அலாதிப்பா'' என சிலாகித்தவர், ''ஒருவாட்டி அப்படித்தாங்க தமிழகத்தோட முதல் சினிமாஸ்கோப் படமான 'ராஜராஜசோழன்' படத்தைப் போட்டாங்க... அந்தப் படத்தோட பாதிப்பிலிருந்து மீள ரெண்டு நாளாச்சு. கை கால்ல கத்தி முளைச்சுடுமோன்னு பயம். பேசும்போதெல்லாம் சவால்விடறது மாதிரியே சுத்தத் தமிழ்ல பேசிக்குவோம்'' எனக் குதூகலித்தார்.

''**எ**ங்களைத் தேடி 'ச-ரோ-ஜா' படமே காலேஜுக்கு வந்துச்சு.'' இமுவையோடு ஆரம்பித்தார் திவாகர். ''அந்தப் படத்தோட காமெராமேன் ஷக்திசரவணன், இங்கே படிச்சவர். அதனால முதல் நாளே 'ஆல்பர்ட்' தியேட்டர்ல போய் பார்த்துடணும்னு கிளம்பினோம். கடைசியில டிக்கெட் கிடைக்காம ஒரே ஏமாற்றம். இதைக் கேள்விப்பட்ட ஷக்தி சார், எங்களுக்காக 'சரோஜா' ஒரு பிரிண்டை இங்கேயே கொண்டு வந்து, ஸ்பெஷல் ஷோ போட்டுக் காண்பித்தார். சினிமாவத் தேடி நாங்க போறது மாதிரி சினிமாவே எங்களத் தேடி இங்க வந்தது'' என்றவரின் முகத்தில் பெருமிதம்!

''**சூ**ப்பர் சூப்பர் காமெடில்லாம் நாங்க காமெரா தூக்கும்போதுதான் நடக்கும். சும்மா ஒரு மணி நேரத்துல முடிக்க வேண்டிய காமெரா பிராக்டிக்கல்ஸ்ல, பசங்க மூணு மணி நேரமா காமெராவும் கையுமா அலைவாங்க. பிரமாதமா ஃபோட்டோ வரப் போகுது போல-னு பார்த்தா வெறும் புல், மண்ணுனு எடுத்துத் தள்ளி இருப்பாங்க. ஃபிலிம் இன்ஸ்டிட்யூட் பசங்கன்னா ஃபிலிம் காட்றதுல மன்னர்களா இருக்கீங்களேடான்னு சொல்லிச் சிரிச்சுக்குவோம்...'' என்கிறார் முரளி கிருஷ்ணன்.

''**இ**தைவிட டார்க் ரூம்ல நடக்கும் பாருங்க கலக்கலான காமெடி. Film develop செய்யும்போது, ஒரு பொட்டு வெளிச்சம்கூட உள்ளே வரக் கூடாதுன்னு கதவை எல்லாம் சாத்திடுவோம். பசங்க யாரும் வெளிலேர்ந்து உள்ள வந்துடக் கூடாதுன்னு கதவைத் தட்டி, சிக்னல் பண்ணுவோம். அதைக் கேட்டுட்டு உள்ள உட்கார்ந்திருக்கற ப்ரொஃபஸர் வெளிலேர்ந்து கதவைத் தட்றாங்கன்னு நினைச்சு, 'உள்ள வாங்கப்பா, உள்ள வாங்கன்னு' சொல்லிக்கிட்டே இருப்பார். அது ரொம்ப காமெடியா இருக்கும்!'' என்று துள்ளினார் துளசிதாஸ். ''நல்ல சினிமாவுக்கு இலக்கணம் என்ன?'' கேட்டால், ''வந்தமா, பேட்டி எடுத்தமான்னு கிளம்புங்கங்க பாஸ். இப்படியெல்லாம் கேள்வி கேட்கப்படாது'' என்று கைப்புள்ள கணக்காய் நக்கலடித்தனர்.



**– நளினி சம்பத்குமார்**

படங்கள்: **குமார்**

இப்போதுதான் தமிழகம், பதினோரு மணி வரை தொலைக்காட்சித் தொடர் பார்க்கிறது. அந்தக் காலத்தில் ஒன்பதரை மணி என்பது எல்லோரும் தூங்குகிற நேரம். அந்த நேரத்தில் மக்களை இழுத்து உட்காரவைத்து, 'என் சீரியலைப் பாருங்கள்' என்று சொன்னால் பார்ப்பார்களா? ஆனாலும், பார்க்க வைத்தோம். அதுதான் சித்தி.

டார். அந்த சமயத்தில் நான் தனி ஆள். கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போல இருந்தது.

அப்போதுதான் எனக்கு சன் டீ.வி. யில் 'சித்தி' வாய்ப்பு கிடைத்தது. களத்தில் இறங்கினேன். என் சகோதரரையும்

# சித்தியின் சிறகுகள்!






நடுவில் சில பிரச்னைகளால் ராடன் கம்பெனியை மூடிவிட்டேன். முதன்முதலில் இந்தத் தயாரிப்பு நிறுவனத்தை ஆரம்பித்த போது என் மாமா சிரில், கூட இருந்தார்.

'ராடன்' என்று பெயர் வைத்தது கூட அவர்தான். ஒவ்வொரு விஷயத்தையும் என்னுடன் உட்கார்ந்து பேசி, முடிவு பண்ணுவார். ஆனால் ரொம்ப நாட்களுக்கு அவர் உதவி கிடைக்கவில்லை. திடீரென்று ஊருக்குக் கிளம்பிப் போய்விட்

ராதிகா

வேண்டியவர்களையும் அழைத்து வந்து, ராடன் அலுவலகத்தில் உட்காரவைத்தேன்; எல்லோருடைய கருத்துகளுக்கும் காதுகொடுத்தேன்.

பிறகு கதை தேடும் படலம். இயக்குநர் சி.ஜே. பாஸ்கர் ஒரு கதையைக் கொண்டு வந்து கொடுத்தார். அதன் மூலப்பிரதி இப்போதும் என்னிடம்தான் இருக்கிறது. அவரின் கதை நன்றாக இருந்தது. வீட்டுக்கான போராட்டம் அதில் இருந்தது. ஆனால், அது 'சித்தி'யின் இரண்டாவது பாகம்தான் என்பது இன்றைக்கும் என் கருத்து.

'சரி, இதை வைத்து ஒரு ஃபேமிலி டிராமா செய்யலாம். என்ன... கதைக்கு ஒரு பின்புலம் இருக்கவேண்டும். ஒவ்வொரு பாத்திரமும் யார், எங்கிருந்து வந்தார்கள் என்பதைச் சொல்லவேண்டும். அவ்வளவுதானே' என்று முடிவு செய்தோம்.

எழுத்தாளர்கள் ராஜ்பிரபு, கவிதா பாரதி இருவரையும் அழைத்து, விவாதித்தோம். அவர்கள் அந்தக் கதையைச் செழுமைப்படுத்தினார்கள். அது ஒரு வித்தியாசமான அனுபவம்.

கடைசி நிமிடம் வரைக்கும் கதை மாறியபடியே இருக்கும். நான் நிற்க நேரம் இல்லாமல் ஓடிக்கொண்டிருந்தேன். ஒரு பக்கம் டைரக்டர், ஷூட்டிங்கில் இருப்பார்; மற்றொரு பக்கம் நானும் மற்றவர்களும் எடிட்டிங்கில் உட்கார்ந்திருப்போம். கதை ரெடி. டைட்டில்? எல்லோரும் அதையே யோசித்துக்கொண்டிருந்தோம். என்ன பெயர் வைக்கலாம்? 'சித்தி!'

என் தந்தை நடித்து எனக்கு மிகவும் பிடித்த படம். வழக்கமாக தமிழ்த் திரையுலகில் 'சித்தி' என்றாலே நெகட்டிவ் கேரக்டராகத்தான் இருக்கும். ஆனால், அந்தப் படத்தில் பத்மினி, நல்ல சித்தியாக வருவார். நான் அந்த டைட்டிலையே வைக்கலாம் என்று சொன்னேன்.

மனமளவென்று காரியத்தில் இறங்கினேன். 'சித்தீ...!' என்று சவுண்ட் போடச் சொல்லி, டைட்டிலில் போட்டுப் பார்த்தேன். திருப்தியாக இருந்தது. நான் நினைத்தபடியே அது க்ளிக் ஆகி, தமிழகமெங்கும் ஒலித்தது.

நூறு எபிஸோடுகளுக்குப் பிறகுதான், சித்தியின் மேல்

* நல்லவனுக்கு நல்லவன் படத்தில்...



கிரேஸ் ஆரம்பமானது. ஒன்பதரை மணி ஸ்லாட் எனக்கு முக்கியமான நேரமாகி விட்டது. இன்றைக்கும் வயதானவர்கள்கூட என்னை 'சித்தி' என்றுதான் கூப்பிடுகிறார்கள். ஆனால், சித்தி எடுப்பதற்கு எல்லா விதமான பயிற்சிக்களமாகவும் இருந்தது சித்திக்கு முன்னர் எடுத்த சிறகுகள் தொலைக் காட்சித் தொடர்தான் என்பது நிறைய பேருக்குத் தெரியாது.

**சி**றகுகள். முழுக்க முழுக்க லண்டனில் எடுக்கப்பட்ட தொடர். நடிகர் விக்ரம், அதில் நடித்திருந்தார். லண்டனுக்கு நடிகர்கள் உட்பட எல்லோரும் போய்விட்டோம். டைரக்டர் மட்டும் வரவில்லை. அவர் பத்து நாட்கள் கழித்துதான் வந்தார். அதற்காகச் சும்மா இருந்துவிட முடியுமா?

நானே உட்கார்ந்து கதை, வசனம் எழுதினேன். டைரக்ட் செய்தேன். நான்தான், காரில் போய் எல்லோருக்கும் சாப்பாடு வாங்கிக்கொண்டு வந்து கொடுக்கவேண்டும்.

''நீங்க ஏன் எச்சில் பிளேட்டெல்லாம் எடுக்கறீங்க. உங்களுக்குக் கஷ்டமா இல்லியா?'' என்று கேட்டார்கள்.

'இந்த வேலையைப் போய்ச் செய்யணுமா?' என்று எப்போதும், எதற்கும் நான் தயங்கியதில்லை. செய்கிற வேலையை மகிழ்ச்சியாக, திருப்தியோடு செய்ய கோதாவில் இறங்கவேண்டும். அவ்வளவுதான். பதின்மூன்றே நாட்களில் மொத்த ஷூட்டிங்கையும் முடித்துவிட்டோம்.

இதெல்லாம்தான் எனக்குள் ஓர் உத்வேகத்தைக் கொடுத்தது. பலனை எதிர்பார்க்காது செயல்பட்டுக் கொண்டிருப்பதுதான் எனக்குப் பிடிக்கும்.

'**நி**றம் மாறாத பூக்கள்' படத்தில் நடிக்கும்போதுதான் எனக்குள் ஒரு மாற்றம் வந்தது. முதன்முறையாக அதில் மாடர்ன் கேர்ளாக நடித்திருந்தேன். அதற்குப் பிறகுதான், எந்தப் பாத்திரத்தையும் ஒதுக்கக்கூடாது.



* விக்ரம்

எல்லா கேரக்டரிலும் நடிக்க வேண்டும் என்று தீர்க்கமாக முடிவெடுத்தேன்.

'பிள்ளை நிலா' என்று ஒரு படம். அதில் எனக்கு நெகட்டிவ் கேரக்டர். பேயாக ஷாலினி உடம்புக்குள் புகுந்து ஆட்டம் போட்டேன். என் நெருங்கிய நண்பர் ஒருவர், ''இந்த ரோல்ல நீங்க நடிக்கணுமா?'' என்று கேட்டபோது, ''விடுங்க சார். நடிப்புத்தானே'' என்றேன்.

'நல்லவனுக்கு நல்லவன்' படத்தில் நடித்தபோதும் இந்தக் கேள்வி வந்தது.

''நீங்க ஏங்க கார்த்திக்குக்கு மாமியாரா நடிக்கணும்?''

நான் திருப்பிக் கேட்டேன். ''ரஜினியே, கார்த்திக்குக்கு மாமனாரா நடிக்கறப்போ, நான் மாமியாரா நடிக்கறதுல என்ன தப்பு?''

''தப்புதான்'' என்றார் ஒருவர்!

**(ரயில் வரும்)**

எழுத்து வடிவம் : **பாலு சத்யா**

# இலங்கையில் நமது சகோதரர்கள்!

*(சென்னை ரேடியோ ஸ்தாபனத்தில் 08.07.'38-ல் செய்த பிரசங்கம் இது.)*

**சி**ல நாளைக்கு முன்பு, நான் இலங்கைக்குப் போயிருந்தேன். அங்கிருந்து திரும்பி வந்த பிறகு ஒரு சிநேகிதர் என்னைச் சந்தித்தார். ''கொஞ்ச நாளாய் ஊரில் இல்லை போலிருக்கே!'' என்று கேட்டார். ''ஆமாம்; இங்கேதான் கிட்டத்துலே போய் விட்டு வந்தேன்; இலங்கைக்கு'' என்றேன். ''எங்கே? இலங்கைக்கா? ஹா ஹா ஹா!'' என்று சிரிக்க ஆரம்பித்துவிட்டார்.

''என்னத்துக்கு ஐயா சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டேன். அவர், ''எனக்குக் காது குத்துகிறீர்களே, ஸார்!'' என்றார். அதற்கு நான், ''ஐயா! நான் உமக்குக் காது குத்தவில்லை. காது குத்துகிறது என்ற வழக்கமே என்னுடைய கொள்கைக்கு விரோதம். சுவாமி கொடுத்திருக்கிற அழகான காதைத் தொலைத்து, அவலட்சணமாக்குகிற வழக்கம் எனக்குப் பிடிக்கிறதேயில்லை. ஆனாலும் நான் ஸிலோனுக்குப் போய் வந்தது என்னவோ நிஜந்தான்'' என்றேன்.

''அப்படி மரியாதையாய் ஸிலோனுக்குப் போய் வந்தேன் என்று சொல்லுங்களேன். இலங்கை இப்போது எங்கே ஸார் இருக்கிறது?'' என்றார்.

இப்போதிருக்கிற ஸிலோன் வேறு, இராமாயணத்தில் சொல்லியிருக்கிற இலங்கை வேறு என்பது அவருடைய தீர்ந்த அபிப்பிராயம்.

சில பேர் சொல்கிறதுண்டு. வெளி தேசத்துக்குப் போனால்தான் நம் தேசத்தின் மேலே நமக்கு பக்தி ரொம்ப அதிகமாகுமாம். எனக்கு இலங்கையிலே அப்படி ஒன்றும் உண்டாகவில்லை. காரணம், இலங்கை ஒரு வெளிதேசமாகவே எனக்குத் தோன்றவில்லை. நம் ஊர் மாதிரியேதான் இருந்தது.

தமிழ்நாட்டிலிருந்து இலங்கைக்குச் சென்றிருக்கிற நமது சகோதரர்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். 'பிரிக்கலாம்' என்றால், ஏற்கெனவே இயற்கையாக உள்ள மூன்று பிரிவுகளைத்தான் சொல்லப் போகிறேன்.

**முதலாவது பிரிவு :**

இந்தியாவிலிருந்து இலங்கைக்கு சீதையை மீட்டு வருவதற்காக சுக்ரீவனுடைய சைன்யத்தில் சேர்ந்து போனவர்கள். இப்படிப் போனவர்களில் சிலர் ராவண வதத்துக்குப் பிறகு இலங்கையிலேயே தங்கியிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. இவர்களை நம்முடைய சகோதரர்கள் என்று சொன்னாலும் சரிதான்; அல்லது, டார்வின் கொள்கையின்படி தாயாதிகள் என்று சொன்னாலும் சரிதான்; அவர்களுடைய வாழ்வு உயர்ந்த வாழ்வு. அதாவது, உயரமான மரங்களின் உச்சாணிக்



கிளைகளிலேதான் அவர்கள் வசிக்கிறார்கள்! அவர்களுடைய உணவோ, 'ஏ' விட்டமின், 'பி' விட்டமின், 'சி' விட்டமின், 'எக்ஸ்' விட்டமின் 'இலட்' விட்டமின் வரையில் அவ்வளவு விட்டமின்களும் ததும்புகிற உணவு. மரத்திலிருந்து பழத்தைப் பறித்து, தோலைக்கூட உரிக்காமல் அப்படியே சாப்பிட்டு விடுகிறார்கள். அவர்களுக்குள்ளே டாக்டர்களும் இல்லை; வியாதிகளும் இல்லை; வக்கீல்கள் இல்லை; அதனால் வழக்குகளும் இல்லை; எழுத்தாளர்கள் இல்லை; அதனால் பத்திரிகைகளும் கிடையாது; எலக்ஷன் என்ற பேச்சே கிடையாது; சாதிச் சண்டையும் பாஷைச் சண்டையும் இல்லை. தமிழினாலே ஹிந்தி சாகுமா? ஹிந்தியினாலே தமிழ் அழியுமா? என்ற விவாதம் இல்லை.

# அமரர் கல்கி

இலங்கையில் ஏராளமான காடுகள் இருக்கின்றபடியால் அவர்களுக்கு ஒரு குறைவும் இல்லை. ஆகையால், அவர்களைப் பற்றி நாம் கொஞ்சமும் கவலைப்பட வேண்டியதில்லை.

**இரண்டாவது பிரிவு :**

சரித்திரக் காலத்தில் தமிழ்நாட்டிலிருந்து இலங்கைக்குச் சென்று குடியேறிய நமது சகோதரர்கள் இருக்கிறார்கள். இவர்கள்தான் இப்போது யாழ்ப்பாணத்திலும், பருத்தித்துறையிலும், திரிகோண மலையிலும், மட்டகளப்பிலும் உள்ள பழந்தமிழர்கள். இவர்கள் இலங்கையில் எப்போது குடியேறினார்கள் என்பது பற்றி

நிச்சயமாகச் சொல்வது கஷ்டம். இலங்கையின் சரித்திரத்தைப் பார்த்தாலும் சரி, தமிழ்நாட்டின் சரித்திரத்தைப் பார்த்தாலும் சரி, இந்த இரண்டு தேசங்களுக்குமுள்ள சம்பந்தம் மிகவும் பழைமையானது என்று தெரியவரும்.

இதற்கு ஆயிரம் வருஷங்களுக்குப் பிறகு, இராஜராஜ சோழனும் அவனுடைய மகன் இராஜேந்திர சோழனும் இலங்கைக்குப் படையெடுத்துச் சென்று எவ்வளவோ வீரதீரச் செயல்கள் புரிந்தார்கள். இன்னும் சிலசமயம் இலங்கை ராஜவம்சத்தில் குழந்தைகள் இல்லாமல்போகும்போது, தமிழ்நாட்டு அரச குமாரர்களில் ஒருவனை அனுப்பி வைக்கும்படி கேட்டுக்கொண்டிருக்கிறார்கள்.

இவ்வாறு போர்க்கோலத்துடனோ, சிநேகபாவத்துடனோ இலங்கைக்குத் தமிழ் மன்னர்கள் போனார்கள். அவர்களைப் பின்தொடர்ந்து, எத்தனையோ தமிழர்களும் போயிருக்க வேண்டும் அல்லவா! இவர்கள் யாழ்ப்பாணம், திரிகோணமலை முதலிய இடங்களில் வாழும் பழந்தமிழர்கள். தற்சமயம் உத்தியோகம், வியாபாரம் முதலிய துறைகளில் ஈடுபட்டு இவர்கள் கொழும்பிலும் மற்ற இடங்களிலும்கூடப் பரவியிருக்கிறார்கள்.

இவர்களிடம் முதன்முதலில் நீங்கள் பேச நேர்ந்தால், அவர்கள் பேசுவது தமிழ் பாஷை என்று கண்டுபிடிப்பதே கஷ்டமாயிருக்கும்.

ஒரு சிநேகிதரைப் பார்த்ததும், ''ஏன் ஸார்! எப்ப வந்தேள்?'' என்று அவர்கள் கேட்க மாட்டார்கள். ''ஐயா; தாங்கள் எப்போது வந்தீர்கள்?'' என்றுதான் கேட்பார்கள்.

இன்று நான் இந்த ரேடியோ ஸ்டேஷனுக்கு வந்ததும், இங்கிருந்த உத்தியோகஸ்தரிடம், ''என்ன, ஸார்வாள், இன்னிக்கு நம்ப 'லெக்சர்' கேட்கறதுக்கு 'ஆடியன்ஸ்' வந்து கூடிட்டாங்களோல்லியோ?'' என்றேன்.

அதற்கு அவர், ''அதை என்னான்னு கேட்டீங்கன்னா ஸார்! இங்கே ஒருத்தரும் வர மாட்டாங்க. 'அவங்க அவங்க, அவங்க அவங்க' வூட்டிலே இருந்தபடியே கேட்டுக்கிடுவாங்க!'' என்றார்.

யாழ்ப்பாணத்தில் படிப்பு அதிகம்; பள்ளிக்கூடங்களும் அதிகம். அதை ஒரு பெரிய, விஸ்தாரமான, கலாசாலை என்றே சொல்லிவிடலாம். நம் ஊர் சங்கீதக் கச்சேரிகளில் 'நீ நாமா' என்று மங்களம் பாட ஆரம்பித்தவுடன், சடசடவென்று எழுந்துவிடுகிறோமே! ஆனால், யாழ்ப்பாணத்தில் மங்களம் முடியும்வரையில் உட்கார்ந்து அநுபவித்துவிட்டு, அப்புறம்கூடக் கொசுறுக்கு இரண்டு தடவை தலையை ஆட்டிவிட்டுத்தான் போவார்கள். அவ்வளவு ரஸிகர்கள்!



## வரவேற்க ஆளில்லை... வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளாய் வண்ணப் பறவைகள்!

—ஆசுரா

**மூன்றாவது பிரிவு :**

இவ்வாறு பழைய காலத்திலேயே இலங்கைக்குச் சென்ற தமிழர் சந்ததிகள், இப்போது ஏழு லக்ஷம் பேர் இருக்கிறார்கள். மீதமுள்ள ஏழு லக்ஷம் தமிழர்கள் புதிதாகப் போனவர்கள்.

இந்த ஏழு லக்ஷம் புதுத் தமிழர்களில் சுமார் ஆறு லக்ஷம் பேர் இலங்கையில் உள்ள தேயிலைத் தோட்டங்களிலும், ரப்பர் தோட்டங்களிலும் வேலை செய்கிறவர்கள். இந்தத் தோட்டத் தொழிலாளிகளைப் பற்றிப் பேசுவதற்கு எனக்கு அதிக சாவகாசம் இல்லை.

ஆகையால், சுருக்கமாக நாலு வார்த்தையில் சொல்லிவிடுகிறேன். இலங்கை இன்றைய தினம் சுபிட்சமாய் இருப்பதற்குக் காரணமானவர்கள், தேயிலை ரப்பர் தோட்டங்களில் வேலை செய்யும் நமது நாட்டு சகோதரர்கள்தான். இலங்கை சர்க்காரின் வருஷ வருமானம் பதினொரு கோடி ரூபாய். இலங்கையில் வர்த்தகம் செழித்திருப்பதும் சர்க்காருக்கு நல்ல வருமானம் வருவதும், உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல சம்பளம் கிடைப்பதும், எல்லாவற்றுக்கும் காரணம் ரப்பரும் தேயிலையுமே.

தேயிலைத் தோட்டங்களுக்குப் போய் இருபது முப்பது வருஷமாக, தோட்டத் தொழிலாளி சகோதரர்கள் என்ன சம்பாதித்திருக்கிறார்கள் என்று கேட்டேன். ஒருவர், ''இருபது வயது சம்பாதித்திருக்கிறேன்'' என்றார்.

ரொம்பப் பரிதாபம். இப்போது எவ்வளவோ தேவலையாம்!

கொழும்பிலுள்ள தமிழர்கள் பகலெல்லாம் அவரவர் தொழிலைக் கவனிக்கிறார்கள்; அஸ்தமித்ததும், சங்கங்களிலும் பிரசங்கங்களிலும் ஈடுபடுகிறார்கள். இவர்களுக்குக் கஷ்டமே ஒன்றும் கிடையாதா? என்று நினைக்க வேண்டாம். அரசியல் சம்பந்தமாகவும், தொழில் சம்பந்தமாகவும் எவ்வளவோ கஷ்டங்கள் இருக்கின்றன. பின்னால் வரும் கஷ்டத்தில் முன்னால் வரும் கஷ்டத்தை மறந்திருக்கிறார்கள்.

இலங்கைச் சகோதரர்கள் நம்மிடம் எதிர்பார்ப்பது என்ன? 'ஏதோ இந்த மூலைத் தீவில் 15 லட்சம் பேர் இருக்கிறோம். எங்கள் ஞாபகம் கொஞ்சம் இருக்கட்டும். உங்களுக்கு மாகாண ஆட்சி வந்து நடத்துகிற மும்முரத்தில் எங்களை மறந்து விடாதீர்கள்' என்றுதான் அவர்கள் கேட்பது. 'உங்களை மறந்து விடுவோமா? அடிக்கடி விசாரித்துக் கொள்கிறோம்.' நான் சொன்னது சரிதானே?

**- ஆனந்த விகடன் (17.07.1938)**

## ஜாக்கிங் செல்லும் முதலாளியம்மா... கை கால் வலியோடு சென்றாள் வேலைக்காரி!

-ஆசுரா



“குதிரைக்குப் போடற மாதிரி அரசர் ரெண்டு கண்ணுக்கும் பட்டை போட்டிருக்காரே... ஏன்?”

“ரெண்டு பக்கமும் கவரிவீசும் பெண்களை அரசர் ஓரக்கண்ணால் பார்ப்பது பிடிக்காமல் அரசியார் செய்த ஏற்பாடு.”

—உ.ராஜாஜி



"அந்தக் கண் டாக்டர் ஒரு போலி...!"

"எப்படிச் சொல்றே?"

"நாள்பட்ட சந்தேகக் கண்களுக்கும் சிகிச்சையளிக்கப் படும்னு சொல்றாரே!"

– எம். அசோக்ராஜா

# கவரிக்குக் கவர்



"தலைவர் புதுமையயா யோசிக்கிறார்னு எப்படிச் சொல்ற?"

"குலுக்கல் மூலமா கூட்டணிகளை உருவாக்கலாம்னு அறிக்கை விட்டிருக்காரே...!"

– பி.ஜி.பி. இசக்கி



"உங்களோட இந்த வெற்றிக்குப் பின்னால இருக்கறது யாரு?"

"கல்யாணம் ஆன மறுநாளே கோவிச்சுட்டுப் போன மனைவி!"

– அம்பை தேவா

# சேலம் 'சோனா'

செயற்கைக்கோள் மற்றும் விண் கலங்களில் பொருத்தப்படும் மோட்டார் களை, சேலம் சோனா தொழில்நுட்பக் கல்லூரி தயாரித்திருக்கிறது. அந்தக் குழு வில் பேராசிரியர்களோடு அங்கு பயிலும் சில மாணவர்களும் இணைந்து செய லாற்றி இருக்கின்றனர். எப்படி இருந்தது அந்த அனுபவம்? இதோ அவர்களே சொல் கின்றனர்.

“இது ஒரு முக்கியப் பணி. இந்தக் குழுவுல நாங்களும் இருக்கோம் என்பதே பெருமையான விஷயம். இந்த மோட்டாரை வடிவமைத்த ஒவ்வொரு கணமும், நாங்கள் பால் வீதியில் பறந்த உணர்வை அடைந்தோம். சேலஞ்ச் ஆகவும் ரொம்பச் சந்தோஷமாகவும் எங்கள் சீனியர்களோடு ஒன்றிணைந்து செயல்பட்டோம். மறக்க முடியாத அனுபவம் அது” எனக் கூறுகின்றனர் சோனா ஸ்பீட் அமைப்பில், பகுதி நேர டிராஃப்ட்ஸ் மேனாகப் பணிபுரிந்துகொண்டே பி.இ. படித்து வரும் மஞ்சு, எம்.இ. இரண்டாமாண்டு மாணவர்களான செல்வகுமார், ஜனார்த்தனன்.

“இஸ்ரோவும் சோனா ஸ்பீட்-ம் புரிந்துணர்வு ஒப்பந்தம் செய்துகொண்ட பின்னணியும், அதற்கான முயற்சிகளும் மிக முக்கியமானவை. ஏனெனில், இது தொடர்பாகச் செயல்படத் துவங்கியதிலிருந்து இஸ்ரோ தந்துவரும் ஒத்துழைப்பு அதிகம். சோனா தொழில்நுட்பக் கல்லூரி நிர்வாகமும் செயலாளர் தீரஜ்லாலும் அளித்து வரும் தொடர் உற்சாகமே, இதுவரை எங்களை வெற்றிப் பாதைக்கு அழைத்து வந்திருக்கிறது!” என்கிறார் சோனா ஸ்பீட் இயக்குநர், பேராசிரியர் கண்ணன்.

திருவனந்தபுரம் இஸ்ரோ யூனிட் 1ல்



* சோனா ஸ்பீட் தயாரிப்புக் குழு...

குழு இயக்குநராகப் பணிபுரிந்த கண்ணன், விருப்ப ஓய்வுபெற்று, சேலம் சோனா தொழில்நுட்பக் கல்லூரியில் பேராசிரியராக இணைந்த பின்னர் உருவான திட்டம்தான் சோனா ஸ்பீட்.

''இஸ்ரோ IISU இயக்குனர் வீரராகவன் தான், இந்தப் புதிய முயற்சிக்கு அடித்தளம் இட்டவர். அவரது எண்ணங்களை, சோனா தொழில்நுட்பக் கல்லூரி நிர்வாகத்திடம் தயாரித்துவிட முடியாது. மூன்று நிலைகளுக்குப் பின்னரே, 'இஸ்ரோ' குறிப்பிட்ட மோட்டார்களை அங்கீகரித்து ஏற்றுக்கொள்கிறது. முதல் நிலை டெவலப்மெண்ட் மாடல்; இரண்டாம் நிலை குவாலிட்டி மாடல்; மூன்றாம் நிலை ஃப்ளைட் மாடல். செயற்கைக் கோள் மற்றும் விண்கலங்களில் நேரடி


✱ கண்ணன்




தெரிவித்தேன். கல்லூரி நிர்வாகமும் சமூக அர்ப்பணிப்புடன், உடனே ஒப்புதல் தரவே சோனா ஸ்பீட் உருவானது. இது எங்கள் கூட்டு முயற்சிக்குக் கிடைத்த வெற்றி.

செயற்கைக்கோள் விண்வெளியில் சுழல்வதற்கு 'ஸ்லாட் லெட் பிரஸ்லெஸ் டி.சி மோட்டார்' பயன்படுத்தப்படுகிறது. விண்கலம் புறப்பட்டுச் செல்லும்போதும், அதன் பாதையில் செலுத்துவதற்கும், அதனைக் கண்ட்ரோல் செய்யவும், '32 நியூட்டன் மீட்டர் டார்க் மோட்டார்' பயன்படுத்தப்படுகிறது. இவற்றை எடுத்த எடுப்பில் யாகப் பயன்படுத்தப்படும் இறுதிவடிவமே Flight Model. தற்போது செயற்கைக்கோள்களுக்குப் பயன்படும் மோட்டார்களின் இறுதிவடிவத்தினைத் தயாரித்து, இஸ்ரோவுக்கு அனுப்பி வைத்துள்ளது சோனா ஸ்பீட். விண்கலங்களில் பயன்படும் மோட்டார்களின் மூன்றாம் நிலையான இறுதி வடிவ Flight Model மோட்டார்களையும் அடுத்து தயாரித்து அனுப்ப உள்ளது'' என்கிறார் சோனா ஸ்பீட் இயக்குநர் பேராசிரியர் கண்ணன். **– ஸ்ரீரங்கம் திருநாவு**

படங்கள்: **புதியவன்**




**தஞ்சை தாமு**

**அ**ந்த அறையில் ஜெயராமன், நடராஜன், ரெங்கசாமி, பாஸ்கரன் நால்வரும் இருந்தனர்.

''இந்தக் கூட்டத்துக்கு, செல்வராஜ் ஏன் வரலை?''- கேட்டார் ஜெயராமன்.

''கொஞ்ச நாளா அவன் போக்கே சரியில்லை... இனி நம்பக்கூடாது'' என்றார் நடராஜன்.

''ரொம்ப ரகசியமான முடிவுகளை, அவன் இருக்கும்போது எடுக்கக்கூடாது'' என்றார் ரெங்கசாமி.

கொஞ்சநேரம் விவாதம் நடந்தது. நடராஜன், ''தோழர்! வீட்டுலே கெஸ்ட் வந்துருக்காங்க... அடுத்த மீட்டிங்லே கலந்துக்கறேன்...'' என்று கிளம்பினார்.

நடராஜன் சென்றதும், ''வர வர இவன் நடவடிக்கை கட்சிக் கட்டுப்பாட்டுக்கு விரோதமா இருக்கு; இவன் மேலே எப்போதும் ஒரு கண்ணு வெச்சிருக்கணும்...'' என்றார் ஜெயராமன்.

பிறகும், அனல்தெறிக்க வாதிட்டனர். ஜெயராமன், ''தோழர்! குழந்தையை டாக்டர் கிட்டே அழைச்சிட்டுப் போகணும்... நான் கிளம்பறேன்'' என்று புறப்பட்டார்.

ஜெயராமன் புறப்பட்டதும், ''நம்ம லைனுக்கு இவன் ஒத்துவர மாட்டான்...'' என்றார் ரெங்கசாமி.

பாஸ்கரன், ''ரொம்ப கரெக்டா அப்சர்வ் பண்ணியிருக்கீங்க தோழர்...'' என்றார்.

சிறிது நேரத்தில் விவாதத்தை முடித்து விட்டு இருவரும் பிரிந்தனர் - ரெங்கசாமியை நம்பக்கூடாது என பாஸ்கரனும், பாஸ்கரனை நம்பக்கூடாதென ரெங்கசாமியும் தீர்மானித்தபடி...! ●




**ல**ண்டன். சர்வதேச எழுத்தாளர் மாநாடு. மதுரை அரங்கநாயகம் ஆங்கிலத்தில் பேசினார். ஆனால், மற்றவர்கள் தத்தம் தாய்மொழியில் பேசினதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்கள். தாய்மொழியில் பேசாத இவரை மற்றவர்கள் விமர்சித்தனர். அரங்கநாயகம் இனி, தமிழில் மட்டுமே பேசுவது எனத் தீர்மானித்தார்.

கோட் சூட், சூட்கேஸுடன் மதுரை விமான நிலையத்தில் இறங்கியவர், அருகிலிருந்த ஆட்டோவில் ஏறினார். அவர் இறங்க வேண்டிய இடம் ஆட்டோக்காரனுக்குத் தெரியாததால், அவரே தூய தமிழில் வழி சொல்லிக்கொண்டு வந்தார்.

''அப்படியே போ... இடதுபக்கமா மூணாவது சந்துலே திரும்பு''

''ஒகோ... தேர்ட் க்ராஸா?'' திரும்பினான். அதேபோல மூன்று நான்கு முறை வலது இடது என்று சொல்லி, வழிகாட்டி, இறுதியில் தன் இருப்பிடம் வந்து இறங்கினார்.

பணம் தந்தபோது ஆட்டோக்காரன் சொன்னான்: ''ஐயாம் ஆல்ஸோ எ கிராஜுவேட் சார்... ஐ நோ இங்கிலீஷ் வெரிவெல்... 'லெஃப்ட்லே போ.. ரைட்லே போ'ன்னா எனக்குப் புரியாதுன்னு நினைச்சுட்டீங்களா?''

அரங்கநாயகம் நொந்துபோனார். ●




யாரிடமும் மாட்டிக்கொள்ளவில்லை. தொழிலை வெற்றிகரமாக முடித்து, கணிசமான வருமானத்துடன் இருப்பிடத்துக்குத் திரும்பிக்கொண்டிருந்த பிக்பாக்கெட் பிச்சுமணிக்கு தாடை நமநமத்தது. முகத்தின் முக்கால் பகுதியில் இரண்டு வாரக் கருப்புல். சலூனைத் தேடினான். 'வீரபத்ரன் முடி திருத்தகம்'

''வாங்க சார்... கட்டிங்கா... ஷேவிங்கா?''

''ஷேவிங்.''

சுழல்நாற்காலியில் அமர்ந்தான். பயங்கரமான துணிப்பஞ்சத்தில் நிற்கும் நடிகைகளின் படங்களைப் பார்த்துக்கொண்டே, இருக்கையில் நூற்று இருபது டிகிரியில் சாய்ந்தான். கைத்தறித் துண்டைப் பொன்னாடையாகப் போர்த்தி, முகத்தில் பஞ்சுபோல் நுரைபொங்க க்ரீம் தடவி, கத்தியால் அறுவடையைத் துவங்கினார் சலூன் கடைக்காரர்.

முதன் முறையாக இப்போதுதான் இந்த சலூனுக்கு வருகிறான் பிச்சுமணி. ஆனால், இந்தக் கடைக்காரரை, எங்கேயோ மிக நெருக்கத்தில் ஏற்கெனவே பார்த்திருப்பது போல் பிச்சுமணிக்கு உறுத்தியது. எங்கே? எப்போது? எனத் தீவிரமாக யோசிக்கத் துவங்கியபோது, அவர் கேட்டார் : ''நீதானே போனவாரம் பூங்கா நகர் பஸ்லே, என் பர்ஸை பிக்பாக்கெட் அடிச்சே?''

இப்போது சவரக்கத்தி அவன் கழுத்தில் இருந்தது. ●

# மச்சக்காரன்!

ப்ளஸ் டூ படிக்கும்போதே, சக மாணவிகளும் பக்கத்துவீட்டுப் பெண்களும் தேடிவந்து பேசக்கூடிய பெர்ஸனாலிட்டி அவனுக்கு. நண்பர்களுக்கு வயிறெரிந்து காதில் புகை வரும்.

எல்லோரும் சொன்னார்கள் : ''மான் உடம்புலேகூட, கொஞ்சம் இடைவெளி விட்டுத்தான் மச்சம் இருக்கும். ஆனா உன் உடம்புலே 'கேப்'பே இல்லாம மச்சம் இருக்குடா...''

''பெண்களை நல்லா அளந்து வைச்சிருக்கே... நீ லேடீஸ் டெய்லரா வருவே.''

வேறு சிலர், ''நீ மகளிர் ஸ்பெஷல் பேருந்துலே கண்டக்டரா வரப் போறே'' என்றார்கள்.

இன்னும் சிலர் ''ஒவ்வொரு படத்துலேயும் புதுப்புது நடிகைகளோட டூயட் பாடுற ஹீரோவா வருவேடா'' என்றார்கள்.

மற்றும் சிலர், ''சின்ன வீடு மாதிரி, சின்ன கிராமமே வைச்சிருக்கிற தலைவரா, நீ ஆகப் போறே'' என்றார்கள்.

இதெல்லாம் கேட்டுக்கேட்டு அந்தத் தென்னை, கோணலாகவே வளர்ந்தது.

எல்லோருடைய கணிப்புகளையும் மிஞ்சும் வகையில், அவன் ஆனது, போலிச்சாமியாராய்! ●

மருதன்

மால்கம்.

''சகோதரர்களே, சகோதரிகளே அஸ்ஸலாம் அலைக்கும்...''

அரங்கம் அதிர்ந்தது!

''அலைக்கும் அஸ்ஸலாம்!''

முழக்கத்தின் ஒலி, அடங்குவதற்காகக் காத்திருந்த மால்கம் எக்ஸ், தனது உரையைத் தொடர ஆரம்பித்தார்.

மேடைக்கு அருகில் ஏதோ சலசலப்பு. ''நீ ஏன் சட்டைப் பைக்குள் கையை விட்டாய்? யார் நீ?'' என்று இருவர் அடித்துக்கொள்ள ஆரம்பித்தார்கள்.

''அமைதி, அமைதி'' என்றார் மால்கம் எக்ஸ். அப்போது மூன்று பேர் முன் வரிசையில் இருந்து எழுந்து நின்றார்கள். மால்கம் அவர்களைப் பார்த்து, கையை அசைக்கும்போதே, ஒரே சமயத்தில் மூவரும் சுட ஆரம்பித்தார்கள்.

ஐயோ இங்கே என்ன நடக்கிறது? ஆண்களும் பெண்களுமாகச் சிதறி ஓட ஆரம்பித்தார்கள்.

முதல் குண்டு மால்கம்

* மால்கம் எக்ஸ்

# மால்கம் என்றொரு

**தா**விச் சென்று மேடையின் மீது ஏறினார் மால்கம் எக்ஸ். எழுந்து நின்று ஆரவாரத்துடன் கையசைக்கும் இளைஞர்களைக் கண்டதும், அவர் மனத்தில் இருந்த அத்தனை சஞ்சலங்களும் மாயமாக மறைந்துபோயின. 'ஒரு மீட்பராக அவர்கள் என்னைப் பார்க்கிறார்கள். அவர்களுக்கான விடுதலையை, நான் வாங்கித் தருவேன் என்னும் நம்பிக்கையின் வெளிப்பாடே இந்த ஆரவாரம். அவர்கள் நம்பிக்கையை நான் நிறைவேற்றி வைப்பேனா?'

உற்சாகம் கொப்பளிக்கும் குரலில் பேச ஆரம்பித்தார்

எக்ஸைத் தாக்கியபோது, மார்பைப் பிடித்துக் கொண்டார்; கால்கள் தடுமாறின. அவரது மற்றொரு கையும் மார்பை நோக்கி விரைந்தபோது இரண்டாவது குண்டு பாய்ந்தது. இடதுகை நடு விரல் சிதைந்து ரத்தம் தெறித்தது. மால்கமின் வெள்ளை தாடியிலிருந்து ரத்தம் கசிய ஆரம்பித்தது. பொத்தென்று பின்புறம் உள்ள இருக்கைகள் மீது விழுந்தார் மால்கம் எக்ஸ். மொத்தம் பதினாறு குண்டுகள் அவரைத் துளைத்திருந்தன.

மேடையை நோக்கிப் பாய்ந்து ஓடினார் மால்கமின் மனைவி பெட்டி எக்ஸ். யாராவது காப்பாற்றுங்கள். அவருக்கு எதுவும் ஆகிவிடக்கூடாது. கடவுளே!

மால்கமின் கழுத்துப் பட்டையைச் சிலர் தளர்த்திக் கொண்டிருந்தார்கள். ஒரு பெண் ஓடி வந்தார்.

''தள்ளுங்கள்... தள்ளுங்கள்... முதலில் அவருக்குச் சுவாசம் கொடுக்க வேண்டும்.''

மால்கமின் தலையைக் கையில் ஏந்தி,



# ஆயுதம்!

அவர் வாய் மீது வாய் பதித்து, செயற்கை சுவாசம் அளிக்க முயற்சி செய்தார் ஒருவர்.

''தள்ளிப் போ, மால்கமை நான் காப்பாற்றுகிறேன்.'' மற்றோர் இளைஞரும் முயன்று பார்த்தார்.

ஏதேனும் சிறு அசைவு தெரிகிறதா பாருங்களேன். மூச்சுக்காற்று? இல்லை! மால்கம், இறந்துபோனார்.

பிப்ரவரி 21, 1965 அன்று நியூ யார்க் நகரத்தில் உள்ள ஆதுபோன் நடன அரங்கத்தில் உரையாற்ற வந்தபோது சுட்டுக்கொல்லப்பட்டார் மால்கம் எக்ஸ். மார்ட்டின் லூதர் கிங் அகிம்சை வழியில் போராடிக்கொண்டிருந்தபோது, அதெல்லாம் சரிப்பட்டு வராது என்று முஷ்டியை உயர்த்திக் களம் இறங்கினார் மால்கம் எக்ஸ். ஆப்பிரிக்க அமெரிக்கர். ஒரு முஸ்லீம்.

ஒரு கறுப்பினத் தலைவர் அமெரிக்க அதிபராகத் தேர்வுசெய்யப்பட்டிருக்கும் இந்தவேளையில், மால்கம் எக்ஸின் சுயசரிதையை வாசிப்பது மிகப் பொருத்தமாக இருக்கும். அலெக்ஸ் ஹெய்லி, மால்கமிடம் பேசிப் பேசி, இந்தப் புத்தகத்தை எழுதியிருக்கிறார். துடிதுடிப்பான போராட்டச் சரித்திரம். ●



"இன்று வோட்டுப் போடுகிற அடித்தட்டு மக்களில் பலருக்கு, சட்ட மன்றம், பாராளுமன்றம்னா என்ன? இவற்றின் பணிகள் என்னென்ன? என்பதெல்லாம் தெரிவதில்லை. படித்த நடுத்தர மக்களும் செய்தித்தாள்களில் அரசியல் பக்கங்களைப் படிப்பதில் ஆர்வம் காட்டுவதில்லை. அனைத்துத் தரப்பு மக்களுக்கும் அரசியல் குறித்த புரிதல் வேண்டும் என்ற நோக்கத்தில் அமைந்த தொடர்தான் 'தலைவா' '' என் கிறார் இந்தத் தொடரின் இயக்குநர் ஏ.ஆர். ரமேஷ். மக்கள் தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகும் இத்தொடர் குறித்து நம்மோடு பேசினார்...

''கமர்ஷியலான குடும்பக் கதை களுக்கு மத்தியில், அரசியலை மையப் படுத்தி தொடர் இயக்குவது என்பது கொஞ்சம் கஷ்டம். இருப்பினும் அரசியலை மையமாக வைத்து தொடர் இயக்குவது அவசியமாகிறது.

ஒரு தலைவர் எப்படியெல்லாம் இருக்கவேண்டும் என்பதைவிட, எப்படி யெல்லாம் இருக்கக்கூடாது என்பதைச் சுட்டிக்காட்டுவதுதான் இத்தொடரின் நோக்கம்.

பாண்டிச்சேரியில் உயர் பதவியில் இருந்த அதிகாரி ஒருவர், தனது காரில் தேசியக்கொடியைத் தலைகீழாகப் பறக்க விட்டதற்காகக் கண்டிக்கப்பட்டார். சில ஆண்டுகளுக்கு முன்பு கேரளாவில், எம்.எல்.ஏ. கலந்துகொண்ட நிகழ்ச்சியில் தேசியக்கொடி தலைகீழாகப் பறக்கவிடப் பட்ட சம்பவம் மீடியாவில் பரபரப்பாகப் பேசப்பட்டது. தமிழ்நாட்டில் ஒரு சிறிய அரசியல் கட்சி, அசோகச் சக்கரத்தைத் தனது கட்சிக் கொடியில் பயன்படுத்து கிறது. இப்படி நமது மூவர்ணக் கொடியை அலட்சியப்படுத்தும் அரசியல்வாதிகளை மக்களுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டத்தான், தொடரில் அதுபோல காட்சியை வைத் தேன்'' என்றவரிடம்,

# இது அரசியலின் சேனல்




அரசியல் என்பதை வாழ்க்கை யிலிருந்து பிரித்துப் பார்க்க முடியாது. ஒரு மனிதன் பிறந்தது முதல் சாகும் வரை, அவனது அனைத் துத் தேவைகளிலும் அரசியல் இருக் கிறது. எனவே

''சந்திரகாந்த் கேரக்டர், நடிகர்களின் அரசியல் பிரவேசத்தைக் கிண்டலடிப்பது போல உள்ளதே? ஏதேனும் உள்நோக்கம் உண்டா?'' என்று கேட்டோம்.

''நடிகர்கள் அரசியலுக்கு வருவது தவ றில்லை. ஆனால், சினிமாவில் கிடைக் கும் புகழ் மட்டுமே அரசியலுக்குப் போதும் என்று நினைத்தால், மண்ணைக் கவ்வுவார்கள். சந்திரகாந்த் கேரக்டரை சினிமாவிலிருந்து அரசியலுக்கு வரும் அனைத்து நடிகர்களின் பிம்பமாகத்தான்

உருவாக்கியுள்ளேன். இதேபோல வாரிசு அரசியலும் மையக் கருத்தாக உள்ளதாகப் பலரும் சொல்கின்றனர்.

மற்ற துறைகளைப் போல, அரசியலில் இருப்பவர்களும் தங்களது வாரிசுகளைக் கொண்டுவருவது தவறில்லை. ஆனால், அது திணிக்கப்படும் விஷயமாக இருக்கக் கூடாது. வாரிசு அரசியலில் மாற்றம் கொண்டுவர, உட்கட்சி ஜனநாயகம் வலுப் பெற வேண்டும்'' என்கிறார்.

''இன்றைய அரசியல் சூழ்நிலை பற்றி?''

''பல்வேறு மேற்கத்திய நாடுகளில் அரசியலில் வெற்றி - தோல்விகளை அங்குள்ள பெரிய கம்பெனிகள் தீர்மானிக்கின்றன. ஒபாமாவின் வெற்றிக்குக்கூட

**இத்தொடரின் எழுத்துப் பணியை மேற்கொண்டிருக்கும் ரூபன், ''பி.பி.சி.யில் சில ஆண்டுகளுக்கு முன்பு ஒளிபரப்பான 'எஸ் மினிஸ்டர்' தொடர்தான் 'தலைவா' தொடருக்கு இன்ஸ்பிரேஷன். 'தைரியமாக விமர்சனம் செய்யுங்கள். விமர்சனங்கள் எங்கள் கட்சியைப் பற்றியதாய் இருந்தாலும் கவலையில்லை, உண்மையைச் சொல்லத் தயங்காதீர்கள்' என்று எங்களுக்கு உற்சாகமளித்தார் மக்கள் தொலைக்காட்சியின் நிறுவனர் மருத்துவர் இராமதாசு அய்யா'' என்கிறார்.**




அமெரிக்காவின் பெரிய கம்பெனிகளின் ஆதரவு இருந்ததாகக் கருதப்படுகிறது. இந்திய அரசியலும், அந்த ஆபத்தான மாற்றத்தை நோக்கி மெதுவாகச் செல்கிறது. இந்தச் சூழல் மாறி, அடித்தட்டு மக்களின் உண்மையான அரசியல் ஜனநாயகம் நிலைநிறுத்தப்பட வேண்டும். அதற்கு இதுபோன்ற விழிப்புணர்வுத் தொடர்களும், ஆரம்பக் கல்வி முதலே முறையான அரசியல் அறிவு புகட்டுவதும் உதவும் என நம்புகிறேன்'' என்கிறார் இயக்குநர் ரமேஷ்.

**- ராகவ் குமார்**

# காதல்

இரண்டு பஸ்கள் நிற்கவில்லை. தீப்தி, அடுத்த வந்த பஸ்ஸை நிறுத்த, இன்னும் அதிகம் முனைப்பு எடுத்துக்கொண்டாள். மணியும் சாலையின் பாதிக்கே போய் நின்று கொண்டான். சரியாக அவர்களைக் கடக்கும்போதுதான் பஸ்கள் வேகமெடுத்தன.

தீப்தி, முகம் கூம்பிப் போய்விட்டாள். கல்லூரி வாசலிலிருந்து இன்னும் தெரிந்த முகங்கள் வெளியே வந்தன.

மீண்டும் மரநிழலில் வந்து நின்று கொண்டான் மணி. கண்ணுக்கெட்டிய தொலைவு வரை ஒரு சைக்கிள்கூட இல்லை. தீப்தி, இன்னும் நடுத்தெருவில் நின்றாள்.

சின்ன உருவம்; சொப்பு பொம்மை மாதிரி. நிறைய கூந்தல். சட்டெனத் திரும்பி, மணியைப் பார்த்து, 'பஸ் வருகிறது, வா வா' என்று சைகையில் அழைத்தாள்.

வழக்கம்போல், டிரைவர் தீப்தியை ஓரக் கண்ணால் பார்த்துக்கொண்டு, நிறுத்தாமல் போனார்.

''என்னய்யா பஸ்காரன் நிறுத்தவே மாட்டேங்கறான்?''

நொடிக்கொரு தடவை கடிகாரத்தைப் பார்த்துக்கொண்டே இருந்தாள்.

'' உனக்கு ஹாஸ்பிட்டல் சரியா தெரியுமா? போயிட்டு மத்தியானத்துக்குள்ள வந்துட முடியுமா?''

மணிக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. காலையில் கல்லூரிக்கு வந்ததில் இருந்தே கேட்டுக்கொண்டு இருக்கிறாள். முதல் வகுப்பையும் தியாகம் செய்துவிட்டுக் கிளம்புவதுதான் திட்டம். அது, துறைத் தலைவர் எடுக்கும் வகுப்பு. அவ்வளவு சீக்கிரம் அவரிடமிருந்து தப்பிக்கமுடியாது.

''வந்துடலாம்மா... எதுக்குக் கவலைப் படறே? பஸ் கிடைச்சா, இங்கேயிருந்து அடுத்த பதினைஞ்சு நிமிஷம், திரும்பிவர அதிகபட்சம் அரைமணி நேரம். போயிட்டு வந்துடலாம்.''

அவளுக்கும் இந்தக் கணக்கின் எளிமை புரிந்திருக்க வேண்டும். ஆனாலும் சந்தேகம். 'நண்பர்களிடம் இருந்து பைக்கை வாங்கிக்கொண்டு போய் வந்துவிடலாம்' என்று மணி முதலில் யோசனை சொன்னான். அதை அப்போது ஒப்புக்கொண்டவள், அப்புறம் என்ன தோன்றியதோ, வேண்டாம் என்று சொல்லி மறுத்து விட்டாள்.

எதிர்பார்க்கும்போது வராமல் போவதுதான் பஸ்ஸின் மகத்துவம். இந்த பூந்தமல்லி ஹைரோடு போகும் பல பஸ்களை, அவன் தொடர்ந்து பார்த்திருக்கிறான். தீப்தி, குறிப்பிடும் மருத்துவமனையைக் கடந்துதான் எல்லா பஸ்களுமே போக வேண்டும்.

''எங்கே ஆக்ஸிடெண்ட் ஆச்சு?''

மணி, தீப்தியைப் பார்த்துக் கேட்டான். ஜன்னலுக்கு வெளியே பார்த்திருந்தவள், அவன் பக்கம் திரும்பினாள்.

''நெல்லூர்லேருந்து திரும்பிவரும் போது, இவங்க வந்த காரை, ஒரு லாரிக்காரன் பின்னாலேயிருந்து மோதியிருக்கான்.''

''எதுக்கு நெல்லூர் போனார்?''

''அவர் சர்வீஸ் என்ஜினியர்தானே. அங்கே ஏதோ கிளையண்ட் இருக்காங்களாம். வேலையை முடிச்சுட்டு வரும்போதுதான் இந்த ஆக்ஸிடெண்ட்.''

ஜன்னலுக்கு வெளியே தீப்தி பார்வையை விலக்கிக்கொண்டாள். பஸ் தடதட வென சத்தம் கொடுத்துக்கொண்டு ஓடியது. கடைசி வரிசையில் உட்கார்ந்திருந்தார்கள்.

''நாலு நாள் ஆச்சு. ஒரு விவரமும் தெரியல; ஃபோனும் இல்ல. அவங்க வீட்டுப் பக்கமே போக முடியல. முந்தா நேத்து ராத்திரி அவ ரோட தம்பிதான் வந்து விஷயம் சொன்னான். காலு கை எல்லாம் ஃப்ராக்சராம். நேத்தே போய் பார்க்கணும்னு பார்த்தேன். முடியல...''

# ஆரோ

பேசப் பேச குரல் மெலிதாகிக் கொண்டே வந்தது. மீண்டும் ஜன்னல் பக்கம் பார்வையைத் திருப்பிக்கொண்டாள். இவளோடு பழக ஆரம்பித்து இரண்டு ஆண்டுகள் இருக்குமா? இருக்கலாம். இன்றுவரை அவள் உற்சாகம் குன்றி, குரல் கம்மிப் பார்த்ததில்லை.

''நேத்து ஃபுல்லா, அவரோட அம்மாதான் ஹாஸ்பிடல்ல உட்கார்ந்திருந்தாங்க. போயிருந்தாலும் பார்த்திருக்க முடியாது. இன்னைக்குத் தம்பி இருக்கானாம். அவங்கம்மாவுக்கு என்னைக் கண்டாலே பிடிக்கல. ரெண்டு மூணு முறை என்னையும் அவரையும் பார்த்திருக்காங்க. வீட்டுல போய் காச்மூச்சனு கத்தலாம். என்கிட்ட என்ன குறையைக் கண்டாங்களோ, தெரியல.''

கண்டக்டர் டபுள் விசில் கொடுத்



– ஆர். வெங்கடேஷ்

தார். இவர்களைப் பார்த்து, அடுத்த ஸ்டாப்பிங்கில் இறங்குகிறீர்களா என் பதுபோல் சைகை காட்ட, ஆமாமெனத் தலையாட்டினான் மணி.

தீப்தி எழுந்து படிக்கட்டின் அருகே போய் நின்றுகொண்டாள். மணி குனிந்து அந்த மருத்துவமனை தெரிகிறதா என்று பார்த்துக்கொண்டு வந்தான்.

''அண்ணா எதுவும் சொல்ல வேண்டாம்னு சொன்னான். நான்தான் மனசு கேக்காம தீப்திகிட்ட போய் சொன்னேன்.''

''டாக்டர், என்ன சொன்னார்?''

''மருந்து மாத்திரை எல்லாம் குடுத்திருக்காங்க. இன்னும் பத்து நாள் இங்க இருக்கச் சொல்வாங்கன்னு நினைக்கறேன். அப்புறம் டிஸ்சார்ஜ் பண்ணிடுவாங்க.''

''இன்னைக்கு ஸ்கூல் லீவா?''

''ஆமா, நேத்து ஃபுல்லா அம்மா இருந்தாங்க. ராத்திரி அப்பா இருந்தாங்க. அம்மா சமைச்சு எடுத்துக்கிட்டு வருவாங்க. அதுவரைக்கும் நான் இருப்பேன். சைக்கிள் டெஸ்ட் வேற வருது. வீட்டுல போய்ப் படிக்கணும்.''

''இங்க படிக்க முடியலையா?''

''ஐயே... இந்த ஆஸ்பத்திரி நாத்தம் தாங்கவே முடியலை. முதல் நாளெல்லாம் பயம் வேற. இவனைப் பார்க்கவே முடியாது. ஐ.சி.யூ.ல இருந்தான்.''

இவர்கள் உட்கார்ந்திருந்த இருக்கைக்கு எதிரே சுவரில் ஒரு ஃபேன் பொருத்தப்பட்டிருந்தது. இடதும் வலதுமாக அது போய்ப் போய் வரும்போது, வெப்பக்காற்றோடு, ஃபினாயில் வாசனையையும் தெளித்துவிட்டுப் போனது.

''சங்கர், உன்னை அண்ணா கூப்பிடறாரு.''

அறைக் கதவைத் திறந்துகொண்டு



''ஒருவர் சொல்லக்கூடாத சொல்லைச் சொல்லிவிட்டதற்காக வாழ்நாள் முழுக்க அவரோடு பேசாமல் இருப்பவர்கள் ஏராளம். ஏனெனில், ஒரு சொல்லைச் சொல்கிற வரைக்கும் அதற்கு நாம் எஜமான். சொல்லிவிட்ட பிறகு, அந்தச் சொல்தான் நமக்கு எஜமான்'' என்று சொல் புராணம் பாடுகிறார் 'லாடம்' படத்தின் இயக்குநர் பிரபு சாலமன்.

''லாடம் படத்தின் கதையே ஒரு சொல்லைச் சுற்றித்தான் வலம் வருகிறது. ஒரு சாஃப்ட்வேர் என்ஜினியர் ஒரு சொல்லைச் சொல்லிவிட அது

தீப்தி வெளியே வந்தாள். மணியின் முகத்தைப் பார்த்துவிட்டு, தன் கைக்கடிகாரத்தையும் பார்த்தாள். கண்கள் கலங்கியிருந்ததைப் போல் தோன்றியது.

''ஃபைவ் மினிட்ஸ் மணி. இதோ சொல்லிட்டு வந்துடறேன். சீக்கிரம் போய்டலாம் இல்லியா?''

பேராசிரியர் தனபாலின் ஸ்கூட்டர் கல்லூரி அருகே வந்து நின்றபோது, மதியம் 1.10. தீப்தி பின்னால் ஏறி உட்கார்ந்துகொண்டாள். மணியையும் ஏழுமலையையும் பார்த்து மையமாகப் புன்னகைத்தார்.

''செமஸ்டருக்குப் படிக்க ஆரம்பிச்சாச்சா?''

''இனிமேதான் சார்.'' எதற்கும் இருக்கட்டும் என்று புன்னகைத்து வைத்தான் மணி. சென்ற ஆண்டு வரைக்கும், அவனுக்கு இயற்பியல் வகுப்பெடுத்தவர். அப்புறம் ரிடையரானார்.

தலையை மட்டும் ஆட்டிவிட்டு, அவர் ஸ்கூட்டரை வேகப்படுத்தினார். தீப்தி தலை கவிழ்ந்திருந்தாள்.

''எங்கடா, ரெண்டு பேரும் அவசரமா போயிட்டு வந்தீங்க?'' ஏழுமலைதான் கேட்டான்.

''தீப்தியோட லவ்வர் ஹாஸ்பிடல்ல அட்மிட் ஆகியிருந்தார். அவரைப் போய் பார்த்துட்டு வந்தோம்.''

ஏழுமலை தன்னைக் கூர்மையாகப் பார்ப்பதுபோல் இருந்தது மணிக்கு. அவன் ஏதேனும் சொல்லிவிடுவானோ என்றும் பயமாக இருந்தது. ஒருகணம் அவன் பார்வையை மணியால் சந்திக்க முடியவில்லை.

தலையைத் திருப்பிக்கொண்ட ஏழுமலை, ''பைத்தியம்டா நீ'' என்று மட்டும் சொல்லிவிட்டு, பஸ்ஸைப் பிடிக்க எதிர்ப்பக்கம் நடக்கத் தொடங்கினான். ○

அவருக்கு எதிராக எப்படியெல்லாம் மாறுகிறது என்பதுதான் திரைக்கதை. அதைத் திகைப்பும் சிலிர்ப்புமாகச் சொல்ல முற்பட்டிருக்கிறோம்.

16 நாட்களில் நடக்கும் சம்பவங்களின் தொகுப்புதான் இந்தப் படம். அதனால்தான் '16 days' என்ற பெயரில் தெலுங்கிலும் இந்தப் படம் தயாராகி வருகிறது'' என்றவரிடம், ''இப்படத்துக்குக் கதாநாயகன் புதுமுகம் ஏன்?'' என்றால்,

''பாப்புலரான முகத்தைக் கதாநாயகனாகப் போட்டால் இந்தக் கதை எடுபடாது. அதனால்தான் அரவிந்த்!'' என்கிறார் பிரபு சாலமன்.

– கண்ணன்



# ஆயிரத்தில் ஒருவன் 4

படித்துவிட்டு வெளிவரும் போதே, ஒரு தொழில் முனைவோராக வரவேண்டும் என்று சரத்பாபு முடிவெடுத்தார். அகமதாபாத் ஐ.ஐ.எம்.மில் சேர்ந்தார். மேலாண்மைப் படிப்பில் கல்லூரியின் முதல் நாள் தொட்டே, அவருக்கு உண்டான சிந்தனை 'என்ன தொழில் செய்யலாம்' என்பதுதான். மிகத் தீவிரமாக யோசித்து, 'ஹாஸ்பிடாலிட்டி துறையில் இந்தியா எதிர்காலத்தில் பிரகாசிக்கும்' என்று முடிவுக்கு வந்தார். பல தேடுதல், ஆய்வுகளுக்குப் பிறகு சங்கிலித் தொடர் உணவகங்கள் தொடங்குவதென முடிவாயிற்று. 'போலாரிஸ்' நிறுவனத்தில் வேலை செய்து சேர்த்த பணம் உதவியாக இருந்தது. அகமதாபாத்தில், தமது முதல் உணவகத்தைத் துவங்க முடிவு செய்து, இடமெல்லாம் பார்க்கத் துவங்கினார். இரண்டு வருடப் படிப்பு முடிந்த அடுத்தநாளே சரத்பாபு துவங்கிய உணவகத்தின் பெயர் ஃபுட் கிங். நியாயமான விலையில், தரமான உணவைத் தயாரித்து வழங்கிய, ஃபுட் கிங், விரைவில் பிரபலமாகி விட்டது. ஐந்து ஊழியர்களுடன் துவக்கப்பட்ட ஃபுட்கிங், இன்று 200 ஊழியர்களுடன் ராஜஸ்தான் மற்றும் சென்னையில் கிளைகளைப் பரப்பி இருக்கிறது. முயற்சியும் உழைப்பும் சரத்பாபுவுக்குக் கொடுத்த பரிசு இது!

அதிர்ச்சியில் ஆயா
அரைக் கீரை விற்கிறான்
அம்பானி

- இது சமீபத்தில் கல்கி இதழில் நான் படித்த ஹைக்கூ. கீரை விற்கும் அளவுக்கு, தனியார் நிறுவனங்கள் சூப்பர் மார்க்கெட் துவங்கி சில்லறை வணிகத்தில் இறங்கியதால், சாமான்யர்கள் எப்படிப் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதே இந்த ஹைக்கூவின் சாரம். ஒரு கட்டு கீரை, பத்து ரூபாய் விற்கும் நிலையில், கீரையும் சூப்பர் மார்க்கெட் விற்பனைக்குத் தகுதி பெற்றுவிட்டது. பி.பி.ஓ.க்கள், கே.பி.ஓ.க்கள் வேலைவாய்ப்பை கணிசமாக வழங்குவதுபோல சில்லறை வணிகத் துறையும், மிக வேகமாகப் பிரபலமாகி வருகிறது. 2016ல் இத்துறையில் சுமார் இரண்டு லட்சம் கோடி புரளுமாம். அந்நிய முதலீட்டாளர்கள், நேரடியாக முதலீடு செய்ய விரும்பும் பத்து துறைகளில் சில்லறை வணிகத் துறையும் ஒன்று. குறிப்பாக இந்தியா உட்பட ஆறு நாடுகளில் அவர்கள் முதலீடு செய்ய ஆர்வம் காட்டுகிறார்கள். நூற்று இருபது கோடி மக்கள் தொகை கொண்ட இந்தியாவில், எட்டு சதவிகித வேலைவாய்ப்பை சில்லறை வணிகம் வழங்குகிறது. நாட்டின் ஒட்டு மொத்த உள்நாட்டு உற்பத்தி (GDP) வளர்ச்சிக்கு, பத்து சதவிகிதம் தனது பங்களிப்பைச் செய்கிறது இந்தத் துறை.



'மாஃபா' பாண்டியராஜன்



# ஒரு கோடி வேலை வாய்ப்புகள்!

**பொ**ருட்களை வாங்குவதில் நமது கண்ணோட்டம் மாறிக் கொண்டு வருவதால், மக்களின் வாங்கும் சக்தி அதிகமாகி வருகிறது. விலை கூடுதலாக இருந்தாலும் பரவாயில்லை; தரம்தான் நமது விருப்பமாக இருக்கிறது. எனவே, எல்லாப் பொருளையும் பாக்கெட்டில் அடைத்து விற்கும் கலாசாரம் தொற்றிக் கொண்டிருக்கிறது. வாங்குபவர்களுக்கு சாய்ஸ் கொடுக்கும்விதமாக, தயாராகும் ஒரே பொருளைக்கூட காட்சிக்கு வைக்க நிறைய இடம் தேவைப்படுகிறது. ஒரு பக்கம் கையேந்தி பவன்கள் சுறுசுறுப்பாக இருந்தாலும், உணவுமால்களிலும் கூட்டம் அலைமோதுகிறது. அண்ணாச்சி மளிகைக் கடை வியாபாரம் ஒருபக்கம் இருக்க, ரிலையன்ஸ் மற்றும் கோத்ரெஜ் போன்ற பெரிய நிறுவனங்கள் சூப்பர் மார்க்கெட்டுகளில் சக்கைபோடு போடுகின்றன. இந்தத் துறையில் விற்பனையாளர்கள், விற்பனை மேலாளர், மார்க்கெட் ஒருங்கிணைப்பாளர், கணக்கர் என்று பலவகையான வாய்ப்புகள் இருக்கின்றன. இப்போது இந்த வணிகத்தில் ஈடுபட்டிருக்கும் பெரிய நிறுவனங்கள், பல கல்லூரிகளோடு உடன்பாடு செய்து கொண்டு, மாணவ, மாணவிகளைத் தேர்வு செய்து, இத்துறை வேலை வாய்ப்புக்குப்



பயிற்சிகொடுத்து வருகின்றன. இந்தியாவில் விவசாயத்துக்கு அடுத்தபடியாக வேலைவாய்ப்பை வழங்குவது சில்லறை வணிகம்தான். இந்தப் பிரிவில் அடுத்த ஐந்து வருடங்களில் உருவாகும் வேலைவாய்ப்புகள் மட்டும் ஒரு கோடியை எட்டும்.

**(வெளிச்சம் வீசும்)**

எழுத்தாக்கம் : **ஸ்ரீநி**

# பாண்டி 'S BLOG

இந்திய - அமெரிக்க அணுசக்தி ஒப்பந்தம் கையெழுத்தாவதற்கு முன்னர் 'அணுசக்தியை, இந்தியா, தனது மிலிட்டரி தேவைகள் உட்பட, சுதந்திரமான பயன்பாட்டுக்கு உபயோகப்படுத்த முடியாமல் போய்விடும்' என்று பேசப்பட்டது. இந்த ஒப்பந்தத்துக்கு அடிப்படையே, நமது மின் உற்பத்தி அணுஉலைகளுக்கு தேவையான யுரேனியத்தைத் தங்குதடையின்றி, நாற்பத்தைந்து நாடுகளிலிருந்து பெற்றுக்கொள்வதுதான். 'நாடுகள் நேரடியாக அதை இந்தியாவுக்கு கொடுக்கலாமே' என்ற கேள்வி எழும். ஆனால், அது ஆக்கபூர்வமானதாகப் பயன்படுத்தப்படுகிறதா என்று ஒவ்வொரு நாடும் பார்த்துக்கொண்டிருக்க முடியாது. எனவே, அமெரிக்கா பல சர்வதேச அணுசக்தி அமைப்புகளைக் கைவசம் வைத்துக்கொண்டு, மேஸ்த்திரியாகச் செயல்பட்டு வருகிறது.

நமது நாட்டில் இப்போதுள்ள பதினைந்து அணுஉலைகள், 4200 மெகாவாட் மின்சார உற்பத்தி செய்கின்றன. இது நமது தேவையில் மூன்று சதவிகிதம் கூட இல்லை. இவற்றின் உற்பத்தியே பல நேரங்களில் ஐம்பது சதவிகிதத்தை தாண்ட முடியவில்லை. காரணம், எரிபொருள் பற்றாக்குறைதான். இப்போது 2020ல் அணுமின் உற்பத்தி 20,000 மெகாவாட்டாக உயரப் போவதாகச் சொல்கிறது மத்திய அரசு. அப்போதும் நமது தேவையில் ஆறு சதவிகிதம்தான் அணு உலைகளால் கொடுக்க முடியும்.

இதற்காக பல அதிவேக ஈனுலைகள் அமைக்கப்பட இருக்கின்றன. நாளடைவில் தனியார்துறையும் இதில் இறங்கலாம். ஆனால், இந்த ஒப்பந்தத்தின் பலனாக, எரிசக்தித் துறையில் வேலை வாய்ப்பு உயர்வதற்கான வாய்ப்பு இல்லை. காரணம், ஏற்கெனவே உள்ள அரசு அணுமின் நிலையங்களில், தேவைக்கும் அதிகமாகவே, ஊழியர்கள் பணியாற்றிக் கொண்டிருக்கிறார்கள். அறிவியல் படித்தவர்கள் மட்டும் கணிசமாகத் தேவைப்படலாம்.

அணு எரிபொருளைக் கணிசமாக மிலிட்டரி தேவைகளுக்குப் பயன்படுத்தும் உரிமை, தொடர்ந்து எரிபொருளின் மறுசுழற்சி போன்றவற்றுக்கும் ஒப்பந்தத்தில் உறுதிசெய்யப்பட்டிருக்கிறது. ஆனால் இந்த அணு உலைகளால் உண்டாகும் கதிர் வீச்சால் மனித உயிர்களுக்கு ஆபத்தில்லை என்று உறுதிமொழி கொடுக்க, யாரும் தயாராக இல்லை. ●

"விலைவாசி உயர்வு, மின் தட்டுப்பாடு போன்றவற்றால் தமிழக மக்கள், மத்திய, மாநில அரசுகள் மீது ரொம்பவே காட்டமாக இருக்கிறார்கள். ஜெயலலிதா, கிருஷ்ணசாமி போன்ற அரசியல் தலைவர்கள் வேறு தாக்கப்படுகிறார்கள்; திருவாரூரில் தொடர்ந்து அரசியல் கொலைகள் நடக்கின்றன; எங்கள் கட்சி மற்றும் தி.மு.க.வைச் சேர்ந்த ஐந்து பேர் கொலை செய்யப்பட்டிருக்கிறார்கள்; கூலிப் படைகள் வெறியாட்டம் போடுகின்றன; காவல்துறை செயலற்றுப் போய்விட்டது; மணல் கொள்ளை, அரிசி கடத்தல் என்று ஒரு பக்கம் ஆளும் கட்சியினர் அட்டகாசம் தொடர்கிறது; இப்போது இலங்கைப் பிரச்னையில் முன்னுக்குப் பின் முரணாகப் பேசி எல்லோரையும் குழப்புகிறார் கலைஞர்" என்று எப்போதும் போல காட்டமான விமர்சனங்களை முன் வைக்கிறார் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலச் செயலாளர் தா. பாண்டியன்.



# "காங்கிரஸ், தி.மு.க. கண்டிப்பாகத் தோற்கும்!"

## –தா.பாண்டியன் பேட்டி

**ஈழப் பிரச்னையில் முதல்வர் என்ன செய்ய வேண்டும்?**

"மத்திய அரசைத் தன் பிடிக்குள் வைத்துள்ள முதல்வர், உடனடியாக இரண்டு காரியங்கள் செய்ய வேண்டும். இந்தியா, இனி இலங்கைக்கு ராணுவப் பயிற்சி மற்றும் தளவாடங்கள் கொடுக்கக்கூடாது என்று நிர்ப்பந்திக்க வேண்டும். அடுத்து போர் நிறுத்தம். இப்போது புலிகள் போர் நிறுத்தத்துக்குத் தயார் என்று சொல்லிவிட்டனர். ஆனால், இலங்கை அரசு, 'நாங்கள் நம்ப மாட்டோம்' என்று தாக்குதலைத் தொடர்கிறது. முதல்வர் இப்போது, கண்டிப்பாக மத்திய அரசிடம் பேசி, இலங்கை அரசைப் போர் நிறுத்தத்துக்கு ஒப்புக்கொள்ளச் செய்ய வேண்டும். பொய் சொல்லும் இலங்கை அரசை, பேச்சு வார்த்தைக்குப் பணிய வைக்க வேண்டும். ஆனால், முதல்வர் தடுமாறுகிறார். காரணம், அவர் மத்திய அரசையும் காக்க விரும்புகிறார்; தமது அரசையும் நீட்டித்துக்கொள்ள விரும்புகிறார்."

**இந்தப் பிரச்னையில் உங்களுக்கும்**

**மார்க்சிஸ்ட்டுகளுக்கும் கருத்து முரண்பாடு உள்ளதே!**

''பிரச்னைக்குத் தீர்வு, இலங்கையின் இறையாண்மைக்கு உட்பட்டு இருக்க வேண்டும் என்கிறது சி.பி.எம். தாக்குதல் நிறுத்தப்பட்டு, தமிழர்கள் காப்பாற்றப்பட வேண்டும் என்பதுதான் முதலில் செய்யப்பட வேண்டியது என்று நாங்கள் சொல்கிறோம். அமைதி திரும்பியதும், ஈழம் சுயநிர்ணயப் பிரதேசமா? அதிக அதிகாரங்கள் கொடுத்தால் போதுமா? இல்லை தனிநாடா? போன்றவற்றை இலங்கை அரசும் தமிழ் மக்களும் தீர்மானித்துக் கொள்ளட்டும்.''

**'பதவிக்கு வந்தால் ஆறு மாதத்தில் இலங்கைப் பிரச்னையைத் தீர்ப்போம்' என்கிறாரே அத்வானி!**

''முடியும்; கண்டிப்பாக முடியும். இந்தியப் பிரதமர் உறுதியானவராக இருந்தால் இது நடக்கும். இதற்காக இலங்கை மேல் படையெடுக்க வேண்டிய அவசியம் இல்லை. ஆனால், இன்றைய மத்திய அரசு கோழைத்தனமாகச் செயல்படுகிறது. சிங்களர்களைப் போல தமிழர்களும் சம உரிமை வாய்ப்புகள் பெற்று வாழ வேண்டும் என்பதுதானே இறுதி முடிவாக இருக்க முடியும்.''

**பல நலத் திட்டங்களைச் செயல்படுத்தியதாக கலைஞர் பட்டியலிடுகிறாரே?**

''என்ன பயன்? **கட்டுச் சோற்றுக்குள் எலியை வைத்துக் கட்டியதைப்போல எல்லாம் பயனற்றுப் போய்விட்டன.** வேறு பல மாநிலங்களை ஒப்பிடும்போது, நலிவுற்ற மக்களுக்கு, பல திட்டங்களை முதல்வர் கொண்டுவந்திருக்கிறார். ஆனால், **சிகரத்தை அடைய நினைத்த அவரது கனவை, கட்சிக்காரர்களும் குடும்பத்தினரும் சிதைத்துவிட்டனர்.** மின்சாரம், ஒரு மெகாவாட் உற்பத்தியாவது அதிகம் உண்டா? கடந்த ஐந்து வருடங்களில் ராஜஸ்தானில் பதினாறு மின் திட்டங்களை, திருச்சி பெல் நிறுவனம் செய்து கொடுத்திருக்கிறது. ஆந்திராவில்கூட பதினொரு மின் திட்டங்கள். தமிழகம் ஏன் கோட்டைவிட்டது? மாநில அரசு இப்படியென்றால் மத்திய அரசு, கூடுதலாக மக்களை வதைக்கிறது. கச்சா எண்ணெய் விலை ஐம்பது சதவிகிதம் குறைந்தபோதும், இன்னமும் பெட்ரோலையும், டீசலையும் அதே விலைக்கு விற்றுக் கொள்ளையடிக்கிறது. இந்தியாவில் விலையேற்றத்துக்கு முக்கியக் காரணம் சிதம்பரம்தான்; அவரே முதல் குற்றவாளி.''

**ஸ்பெக்ட்ரம் ராஜா?**

**"கட்டுச் சோற்றுக்குள் எலியை வைத்துக் கட்டியதைப்போல, கலைஞரின் எல்லா திட்டங்களும் பயனற்றுப் போய்விட்டன. காரணம், அவரது குடும்பமும், கட்சியும்தான்!"**



''இந்த விஷயத்தில் மத்திய அரசுக்கு 60,000 கோடி வரை நஷ்டம் என்று எதிர்க்கட்சிகள், தேசிய பத்திரிகைகள் குரல் கொடுக்கின்றன. குற்றச்சாட்டு வந்தால் ராஜினாமா செய்துவிட்டு, விசாரணைக்கு வழிவிடுவதுதான் நியாயமான அணுகுமுறை. பதவியிலேயே ஒட்டிக்கொண்டிருந்தால் இன்னும் சந்தேகம் வலுக்கும். தேர்தலின்போது ராஜா மற்றும் அவரது பின்னணியில் உள்ளவர்களை மேடைக்கு மேடை அம்பலப்படுத்துவோம். 'ராஜா தாழ்த்தப்பட்டவர்; படித்து முன்னேறியவர்' என்றெல்லாம் முதல்வர் இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்வது சரியல்ல. குற்றச்சாட்டு வரும்போதெல்லாம், 'தாழ்த்தப்பட்டவர்' என்ற கவசத்தைப் போட்டுக்கொண்டால், எதிர்காலத்தில் தாழ்த்தப்பட்ட சமூகத்தின் நியாயமான குரல்களை ஆதரிப்போரும் யோசிக்கத் துவங்குவார்கள்.''



"குற்றச்சாட்டு வரும்போதெல்லாம் தாழ்த்தப்பட்டவர் என்ற கவசத்தைப் போட்டுக் கொண்டால், எதிர்காலத்தில் அந்தச் சமூகத்தின் நியாயமான குரல்களை ஆதரிப்போரும் யோசிக்கத் துவங்குவார்கள்."

**கூட்டணி?**

''காங்கிரஸுடன் தி.மு.க. இருக்கும்வரை அந்தக் கட்சியுடன் எங்களுக்கு எந்த உறவும் இருக்காது; இது உறுதி. நாங்கள் அ.தி.மு.க. உட்பட மற்ற கட்சிகளை ஒருங்கிணைக்கும் முயற்சியில் இறங்கியிருக்கிறோம். மார்க்ஸிஸ்ட்டும் நாங்களும் ஒரே அணியில் தான் இருப்போம். நாங்கள் அமைக்கும் கூட்டணியே வெற்றி வாகை சூடும்.''

**இனி காங்கிரஸ்?**

''அணு மின் நிலையங்களுக்கு எரிபொருள் தேவை என்ற அடிப்படையில், அணு ஒப்பந்தத்தின் மூலம் இந்தியாவின் இறையாண்மையை அமெரிக்காவுக்கு எழுதிக்கொடுத்துவிட்டது காங்கிரஸ். இனி அமெரிக்க அணுப் பொருட்களின் சந்தையாக மாறி விடும், அதன் காலனி நாடுகளில் இந்தியாவும் ஒன்றாகி விட்டது. காங்கிரஸின் இந்த மாபெரும் தவறை ஒருபோதும் மன்னிக்கமுடியாது. தோரியத்தைச் செறிவூட்டி எரிபொருளாக மாற்றும் தொழில் நுட்பம் இந்திய விஞ்ஞானிகளுக்குச் சாத்தியப்படும் இந்த நேரத்தில், ஒப்பந்தத்துக்கு என்ன அவசியம்? சந்திராயானும், அதிவேக மின் ஈனுலைகளும், நமது விஞ்ஞானிகளின் சுய உருவாக்கம்தானே? இதையெல்லாம் கணக்கெடுக்காமல் அமெரிக்காவின் அடிமையாக நம்மை மாற்றிவிட்டது காங்கிரஸ். எனவே, தேசிய அளவில், காங்கிரஸ் மற்றும் பா.ஜ.க.வுக்கு மாற்றாக வலுவான அணியைக் கட்டுவதற்கான முயற்சிகளில் நாங்கள் இறங்கியிருக்கிறோம்.''

– ப்ரியன்

# ஜி.எஸ்.எஸ்.

முன்பெல்லாம் 'கிளினிக்கல் சோதனை'க்கு டாக்டர்கள் மிகவும் முக்கியத்துவம் கொடுப்பார்கள். நோயாளியின் உடலைத் தொட்டுச் சோதிப்பது, கேள்விகளைக் கேட்டு நோயின் பின்னணியை அறிவது... போன்றவை இதில் முக்கியமான விஷயங்கள். ஆனால், இப்போது இந்தப் பழக்கம் மிகவும் குறைந்துவிட்டது.

உடனுக்குடன் ஏதாவது மருத்துவச் சோதனையைச் செய்துகொண்டு வரச் சொல்கிறார்கள். ஒருவருக்கு இருபது நிமிடங்கள் செலவழித்து, நோயைக் கண்டறிய டாக்டருக்கு நேரமும் இல்லை; பொறுமையும் இல்லை. ஐந்து நிமிடங்களுக்கு ஒரு நோயாளி என்றால், லாமே' - என்றும் எண்ணுகின்றனர் பரிசோதனை முறைகளும் தொழில்நுட்பமும் எளிமையாகியிருப்பதும் இதற்கு ஒரு காரணம்.

''டைஃபாய்டாகத்தான் இருக்கும் என்று முடிவுக்கு வந்த பிறகு, அதை உறுதிசெய்துகொள்வதற்காக ரத்தப்பரிசோதனை செய்தால் தவறில்லை. ஆனால், காய்ச்சல் வந்துவிட்டாலே, டைஃபாய்டு, டெங்கு நோய்களுக்கான சோதனைகளைச் செய்துகொள்ளச் சொல்வது சரியா?''

- கேட்பவர் ஒரு சீனியர் டாக்டர் அல்ல; இளம் மருத்துவர்!

# ஸ்கேனில்



அறுவைச் சிகிச்சையே தேவைப்படாதபோதும் அது அவசியம் என்பது போல் அச்சுறுத்தி நிறைவேற்றும் போக்கும் நிலவுகிறது. நம்மில் நூற்றுக்குத் தொண்ணூற்றாறு பேருக்கு மூக்கு கொஞ்சமாவது வளைந்துதான் இருக்கும். தீவிர ஜல தோஷம், கொஞ்சம் காதுவலி என்று மருத்துவரிடம் போனால் அவ்வளவுதான். 'உங்களுக்கு 'செப்டம்டீவியேஷன்' பாதிப்பு இருக்கு. அறுவைச் சிகிச்சையிலே




அதிகம் காசு பார்க்கலாமே... என்கிற 'கமர்ஷியல்' போக்கும் அதிகரித்துள்ளது. தவிர, 'எதற்கு ரிஸ்க்? ரத்தப்பரிசோதனையைச் செய்துகொண்டு வரச் சொல்லிவிட



# தெரியும் உண்மைகள்!

இதை உடனடியாகச் சரிசெய்யலேன்னா காதுகள், சுவாசப் பகுதிகள் எல்லாமே பாதிக்கப்படும். தள்ளிப் போடப்போட பிரச்னைகள் அதிகம். அடுத்த வியாழக் கிழமை, ஓர் ஆபரேஷன் கேஸ் வேற ஒரு காரணத்தினாலே தள்ளிப் போயிருக்கு. அந்தவிதத்தில் யு ஆர் லக்கி. அன்னைக்கு தியேட்டரை ஃபிக்ஸ் பண்ணிடவா?' என்கின்றனர். மருத்துவ அறிவு அவ்வளவாக இல்லாத நோயாளிகள் உடனே இதற்குப் பணிந்து விடுவார்கள். அறுவைச் சிகிச்சை செய்யாமலே, கவனமான வாழ்க்கை முறை மாற்றங்கள் மூலம், இந்தப் பிரச்னையைச் சமாளிக்கமுடியும் என்று கற்றுத் தருவது மருத்துவ உலகின் பொறுப்பு இல்லையா? விதிவிலக்காக நிகழவேண்டிய ஆபரேஷன்களே அன்றாட விதியாக மாறலாமா?

**எ**ங்கள் தெருவில் குடியிருக்கும் ஓர் இளைஞனுக்கு நேர்ந்த அனுபவம் : ஸ்கூட்டரில் தி.நகரின் மிகவும் பிஸியான சாலையில் சென்று கொண்டிருந்தபோது, திடீரென்று உடலெல்லாம் வெப்ப மானது போன்ற உணர்வு அவனுக்கு. தலைசுற்றல் ஏற்பட்டது. கலவரமாகி அருகிலிருந்த ஒரு நர்ஸிங் ஹோமுக்குள் நுழைந்தான்.

அங்கிருந்த டாக்டர் அந்த இளைஞனின் ரத்த அழுத்தத்தைப் பரிசோதித்தார். '130/90' என்றது கருவி.

''இந்தச் சின்ன வயசிலே உங்களுக்கு ரத்தக்கொதிப்பு வந்திருக்கே. இதற்கு முன்னாலே எப்போதாவது உங்களுக்கு பி.பி. எடுத்திருக்காங்களா? அப்போது நார்மலா... இல்லையா?''

**ஹாஸ்பிடல் எத்திக்ஸ்**

**தனியார் ஸ்கேனிங் மையத்தில் சி.டி. ஸ்கேன் ஒன்றுக்கு ரூபாய் 3,500; ஆனால், அரசு மருத்துவமனையில் ரூபாய் 500 தான்!**



இரு வருடங்களுக்கு முன் தனது நிறுவனத்தில் நடைபெற்ற வழக்கமான மருத்துவப் பரிசோதனையின் போது, தனது ரத்த அழுத்தம் நார்மலாகவே இருந்ததாகக் கூறினான் அந்த இளைஞன்.

''தினமும் வாக்கிங் போங்க. சாப்பாட்டிலே உப்பைக் குறைச்சுக்குங்க. டென்ஷன் ஆகாம இருக்க முயற்சியுங்க'' என்றெல்லாம் பொறுப்பாக, அக்கறையாகக் கூறிய டாக்டர் மருந்துச் சீட்டில் ஒரு மாத்திரையையும் எழுதிக் கொடுத்தார்.

''இந்த மாத்திரையை ரெண்டு நாளைக்குப் போட்டுக்குங்க. அப்புறம் டெஸ்ட் ரிசல்ட்டோடு வந்து என்னைப் பாருங்க.''

அந்த அப்பாவி இளைஞன், ''என்ன டெஸ்ட் டாக்டர்?'' என்று கேட்க, ''ஓ அதைச் சொல்லலியா, ஸாரி... ஒரு ஈ.சி.ஜி.யும் எக்கோகார்டியாகிராமும் எடுத்துக்குங்க.''

''சரி டாக்டர்.... எங்க வீட்டுக்குப் பக்கத்திலேயே ஒரு 'லேப்' இருக்கு. இன்னைக்கே எடுத்துக்கறேன்.''

சட்டென அந்த டாக்டரின் முகத்தில் அதிருப்தி. ''கண்ட லேபிலே செய்துக்கிட்டுத் தப்பான முடிவுகள் வந்துடக் கூடாது. டெஸ்ட்களைச் சரியாகச் செய்வதிலே இவங்கதான் பெஸ்ட்'' என்றபடி ஒரு ஸ்கானிங் மையத்துக்குத் தன் லெட்டர் பேடில் ஒரு சின்னக் கடிதம் எழுதுகிறார்.

முதல்முறையாக ஒருவருக்கு அதிக ரத்த அழுத்தம் இருப்பது கண்டறியப்படுகிற போது, அது தற்காலிகமானதா இல்லையா என்பதை, சில முறைகள் தொடர் பரிசோதனை செய்து உறுதிசெய்து கொள்ளவேண்டும். அப்படி எதுவும் செய்யாமல் இப்படி டெஸ்டுகளை எடுக்கச் செய்வது தவறு.

'பாவம், நோயாளியின் நலனுக்காக அக்கறையாகச் சிபாரிசுக் கடிதம்கூட எழுதியிருக்கிறாரே' என்று நாம் நெகிழ்ந்துவிட முடியாது.

டாக்டர் சிபாரிசு செய்யும் ஸ்கேனிங் மையத்தில் ஒரு சி.டி. ஸ்கேன் செய்து கொண்டால், 3,500 ரூபாய் வாங்குகிறார்கள். அரசு மருத்துவமனையில் இதே சோதனை 500 ரூபாய்க்குச் செய்யப்படுகிறது.

'என்னது, ஏழு பங்கு அதிகமா?' என்று மூர்ச்சை அடைய வேண்டாம். அரசு மருத்துவமனையில் கிடைக்காத சில சௌகரியங்களை நமக்குத் தனியார் சோதனை மையங்கள் வழங்குவதோடு, நம்மை அனுப்பி வைக்கும் டாக்டர்களுக்குக் கணிசமான கமிஷனும் தருகின்றன. இந்த நடைமுறை இன்று நம் நாட்டில், பல மருத்துவப் பரிசோதனை மையங்களில் பெரும் வேகத்தில் அதிகரித்து வருகிறது!

(தொடரும்)

* B Naturals நந்தகுமார்



# நலம் தரும் நாவல் பழம்

"வாயில் போட்ட உடனேயே இனிக்கிறதோ இல்லையோ... உடம்பில் தேவையில்லாத சர்க்கரையைக் குறைக்கக்கூடிய பெரும் ஆற்றல் படைத்தது நாவல்பழம். இதைப் பொடியாக்கி தினம் ஐந்து முதல் பத்து கிராம் வரை, ஆறு மாதங்கள் விடாமல் சாப்பிட்டு வந்தால், டயாபடீஸ் நிச்சயம் வராது'' என்கிறார் B Naturals நிறுவனத்தின் எம்.டி. நந்தகுமார்.

"குளூகோஸ் மற்றும் ப்ரக்டோஸ் மட்டுமே நாவல்பழத்தில் இருக்கின்றன. டயாபடீஸை தூண்டக்கூடிய sucrose துளிக்கூட கிடையாது. எளிய முறையில் நாவல் பழத்தைச் சாப்பிட வைக்க ஜூஸ் வடிவத்தில் இந்தியாவிலேயே முதன்முறையாகக் கொண்டு வந்திருக்கிறது எங்கள் B Naturals நிறுவனம்.

B Naturals-ன் கண்டுபிடிப்பான நாவல் பழச்சாற்றை, விடாமல் பருகி வந்தால், ரத்தத்தில் உள்ள சர்க்கரை அளவைக் கட்டுக்குள் வைத்திட முடியும். கால்சியம், பாஸ்பரஸ், இரும்புச் சத்து, மெக்னீஷியம் மற்றும் வைட்டமின் ஏ, வைட்டமின் சி போன்ற சத்துக்கள் அடங்கியுள்ள நாவல் பழத்தைச் சாப்பிட்டு வருவதால், இயற்கையான உடல்சத்து கிடைக்கும். குறிப்பாக ரத்தசோகை



மட்டுப்படும்'' என்கிறார்.

"சந்தைகளில் விற்கப்படும் நாவல் பழங்கள் மரங்களிலிருந்து கீழே விழுந்த பின் எடுக்கப்பட்டு விற்கப்படுகின்றன. இப்படிக் கீழே விழுந்து அடி பட்ட பழங்கள் அதற்குரிய இயற்கையான சக்தியை இழந்து விடுகின்றன. அதனாலேயே நாங்கள் ஒரு பிரத்யேகமான வலையைப் பயன்படுத்தி கவனமாக மரங்களிலிருந்து எடுக்கிறோம். இதனால் சக்தி துளிகூட வீணாகாது.

நாங்கள் தயாரிக்கும் நாவல் பழ ஜூஸோடு சர்க்கரை, தண்ணீர் என எதையும் கலக்காமல் அப்படியே குடிக்கலாம். ஏழே நாட்களில் முன்னேற்றத்தை சர்க்கரை நோயாளிகள் உணரலாம். சென்னையில் ஃப்ரீ டோர் டெலிவரி செய்கிறோம். பல சூப்பர் மார்க்கெட்டுகளில் இந்த நாவல் பழ ஜூஸ் கிடைக்கிறது. அப்படிக் கிடைக்காத பட்சத்தில் 044-42328080 என்ற எண்ணில் எங்களைத் தொடர்புகொண்டால், சென்னைவாசிகளுக்கு வீடு தேடி வந்து ஜூஸ் டெலிவரி செய்கிறோம். தமிழகத்தின் பிற பகுதிகளில் உள்ளவர்களுக்கு கூரியரில் அனுப்பி வைக்கிறோம்'' என்கின்றார் இந்நிறுவன எம்.டி. நந்தகுமார்.

– சம்பத்குமார்

# இடையறாது பொழியும் ஒளி!

ஸ்ரீ லலிதா

மூன்றாம் பாகம்

சுதா சேஷய்யன்

அம்பாள் எப்படி குளிர்நிலவாக இருக்கிறாள் என்பதைச் சொன்னது **மஹாகாமேச நயன குமுத ஆஹ்லாத கௌமுதி** என்கிற திருநாமம். இதற்கு அடுத்த திருநாமமே அவளை, சூரியனாக வர்ணிக்கிறது:

**பக்த ஹார்த தமோ பேத பானுமத் பானு ஸந்ததி:** பானுமானுடைய பானு ஸந்ததி என்று இதற்குப் பொருள். பானு என்பது சூரியனின் பெயர். பானு ஸந்ததி என்றால் சூரியனின் கிரணங்கள். நிறைய கிரணங்கள் நிறைந்தவனாதலால் அவன் பானுமான்.

விஞ்ஞானக் கணக்குப்படி பார்த்தால், சூரியனிடத்திலிருந்து வரக்கூடிய கிரணங்கள், இங்கே பூமியை வந்து அடைவதற்கு எட்டு நிமிடங்கள் ஆகின்றன. அப்படி முதலில் அங்கிருந்து தொடங்கிய கிரணம் வந்தாயிற்று என்று வைத்துக்கொள்வோம். அடுத்து எழும் கிரணம் அதன் பின்னே தானே வர வேண்டும். அது வந்து சேர இன்னும் எட்டு நிமிடங்கள் ஆகும். ஆனால், அப்படி இடைவெளி ஏற்படாமல் பார்த்துக் கொள்ளும் தொடர் கிரணங்களாக அம்பாள் இருக்கிறாள் என்பதைத்தான் **பானுமத் பானு ஸந்ததி:** என்கிற திருநாமம் குறிக்கிறது.

இருட்டே இடையில் வரவிடாமல், தொடர்ச்சியாக ஓர் ஒளிப்பொழிவை சூரியன் பொழிகிறாற்போலே, அம்பாளிடமிருந்து கிரணப்பொழிவு வெளிப்பட்டு இருளைப் போக்குகிறது. எங்கே...? **பக்த ஹார்த்த தமோ பேத** - பக்தர்களின் ஹ்ருதயத்தில் பொழிகிறது. அங்கே இருக்கக் கூடிய தாமஸ குணம் என்கிற இருளைப் போக்குகிறது.

சிவனாரிடத்தில் சந்திரனாக இருக்கிறவள்தான், இங்கே சூரியனாக இருக்கிறாள்! எங்கே நெருப்பு அதிகமோ அங்கே சந்திரனாகக் குளிர்விக்கிறாள். எங்கே தாமஸம் (அறியாமை) அப்படியே நிறைந்து கிடக்கிறதோ அங்கே குளிர்வித்துப் பயனில்லை; அங்கே சூரியனாகி எரிக்க வேண்டும் - அதைத்தான் அம்பிகை செய்கிறாள்.

'பானு ஸந்ததி' என்பது ரொம்ப அழகான பிரயோகம். ஏதோ ஒரு நிமிஷம் வந்துவிட்டுப் போகிற கிரணமல்ல; தொடர்ச்சியான ஒளிக்கீற்று வந்து கொண்டிருக்கிறது என்பதுதான் அதன் சிறப்பு. இதைத்தான் ஆசார்யார் ஆதி சங்கரர், *'அவித்யானாம் அந்தஸ்திமிர, மிஹிர த்வீப நகரி'* என்று பாடினார். எங்கள் உள்ளுக்குள்ளே இருக்கக்கூடிய அஞ்ஞானமாகிற இருட்டைப் போக்கக் கூடியவள்; சூரியனாகத் திகழ்பவள்.

## சிவனின் சக்தி!

**சிவதூதி** - என்பது அடுத்த திருநாமம். சிவபெருமானையே தூதராகக் கொண்டவள். சும்ப - நிசும்பர்களை சம்ஹாரம் செய்யும் முன், அம்பாள் சிவபெருமானையே தூதாக அனுப்பினாள் என்று ஒரு புராணக் கதை உண்டு.

**சிவ ஆராத்யா** - சிவனாலேயே ஆராதிக்கப்படக் கூடிய

வள்.

**சிவங்கரி** - 'சிவம்' என்கிற மங்களத்தைத் தரக்கூடியவள்.

**சிவப்ரியா** - மங்களமான சிவத்துக்கு ப்ரியமானவளாக இருப்பவள்.

**சிவபரா** - சிவத்தைவிடவும் உத்கிருஷ்டமானவள், உயர்ந்தவள் என்றால், சிவத்தையே ஆட்டுவிக்கக் கூடியவள். அசலமாக - அசையா சக்தியாக - இருக்கக் கூடியவரான சிவத்தை ஆட்டுவிக்கக் கூடியவள் என்பதால், **சிவபரா** என்கிற திருநாமம்.

**சிஷ்ட பூஜிதா** - சிஷ்டர்களால் பூஜிக்கப்படுபவள்.

**அப்ரமேயா** - அளவிடமுடியாத பெருமை படைத்தவள்.

**ஸ்வப்பிரகாசா** - சுயமான பிரகாசத்தை உடையவள்.

## மனத்தின் ஆற்றல்!

**மனோவாசாம் அகோசரா** - மனத்துக்கும் வாக்குக்கும் எட்டாத உயரத்தில் இருப்பவள். மனத்தாலும் வாக்காலும் அவளை எட்டிப்பிடிக்க முடியாது என்றால், உடலாலும் நிச்சயமாக எட்டிப்பிடித்துவிட முடியாது!

பரத சாஸ்திரத்தில், பரத முனிவர் ஒரு விஷயம் சொல்வார். நாட்டியத்தோடு தொடர்புடையதான விஷயம்:

அபிநயம் மூலம் நடனத்தில் ஏதோ ஒன்றைத் தெரிவிக்கவிரும்புகிறோம். 'நடராஜர் சிதம்பரத்தில் ஆடுகிறார்' என்பதையே காட்ட விரும்புகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். இங்கேயிருந்து சிதம்பரத்துக்கு அழைத்துக்கொண்டு போய்க் காண்பித்துவிட்டு வர முடியாது. நடனக் கலைஞர்கள் என்ன பண்ணுவார்கள், கையினால் ஓர் அசைவு அல்லது முத்திரை காட்டுவார்கள். அருவமான ஒரு விஷயத்தைச் சொல்ல வேண்டுமானால், அதற்கென்று சில அபிநயங்கள் இருக்கும். கையால் ஒரு விஷயத்தைச் சித்திரித்துக் காட்டுவதென்பது அபிநயம்.

அந்தக் கை, எப்படி எங்கே போகிறதோ, கண்ணும் தொடர்ந்து போகும். நாட்டிய சாஸ்திரம் படைத்த பரத முனி சொன்னார், ''கை எப்படி, எங்கே போகிறதோ கண்ணும் அங்கே தொடர்ந்து செல்ல வேண்டும் - **யதா ஹஸ்த: ததா த்ருஷ்டி; யதா த்ருஷ்டி ததா மனஸ்:**''

கை செல்லும் திசையில் - போக்கில்



கண் செல்ல வேண்டும். ஆனால், கை செல்லும் தூரத்தைக் காட்டிலும் கடந்து, கண்ணால் பயணம் செய்து ஒரு விஷயத்தை உணர்த்தமுடியும். கை போகிற திக்கிலேயே, அதைவிட ஆறு அல்லது ஏழு மடங்கு தூரம் கண்ணால் போகமுடியும் அல்லவா! குறுக்கே ஒரு சுவர் அல்லது தடுப்பு இருந்தால் கை தடைப்பட்டு நிற்கும்; ஆனால் கண்ணின் ஜாடையானது அந்

தச் சுவரையும் தடுப்பையும் தாண்டிப் போய்விடும்!

இப்படிக் கையும் கண்ணும் செல்கின்ற திசையை நாம் நன்றாக கவனித்தோமானால், நம் மனமோ அதையும் தாண்டி, நினைத்த இடத்துக்கே போய்விடும் - ரொம்ப தூரம் போய்விடும். இதைத்தான் ***யதா ஹஸ்த: ததா த்ருஷ்டி; யதா த்ருஷ்டி ததா மனஸ்:*** என்றார் பரத முனிவர்.

## சிதம்பரமும் செவ்வாய் கிரஹமும்!

**கை**, 'அதோ சிதம்பரம்' என்று சுட்டினால், கண் அந்தத் தூரத்தைத் தாண்டியும் நோக்கும்; மனமோ சிதம்பரத்துக்கே போய்ச் சேர்ந்துவிடும்.

இன்றைய தேதியில், செவ்வாய் கிரஹத்துக்கு மனிதர்கள் யாரும் போனதில்லை. ஆனால், நம் மனம் மட்டும் நினைத்தால் செவ்வாய் கிரஹத்துக்குப் போய் ஒரு சுற்று சுற்றி, 'அது இப்படித்தான் இருக்கிறது' என்று நிர்ணயமாகத் தெரிந்து கொண்டு வந்துவிடும்! அவ்வளவு ஏன்?

**கை 'அதோ சிதம்பரம்' என்று சுட்டினால், கண் அந்தத் தூரத்தைத் தாண்டியும் நோக்கும்; மனமோ சிதம்பரத்துக்கே போய்ச் சேர்ந்துவிடும்.**

இந்த மனசானது நம் சூரிய மண்டலத்தையேகூட கடந்து வேறு சூரிய மண்டலங்களுக்குப் போய் ஒரே கணத்தில் வட்டமடித்துவிட்டு வந்து, 'அங்கே எத்தனை சூரியன்கள் தெரியுமோ? நான் கோடி சூர்யப் பிரகாசத்தைப் பார்த்தேன்!' என்று கூட சொல்லும்.

அப்படியானால் மிக அதிக தூரம் செல்லக்கூடிய விஷயம் என்பது மனம்தான். ஆனால் அந்த மனத்துக்கே கட்டுப்படாதவள், எட்டாதவள் அம்பிகை என்கிற போது, நம் சொல்லால் மட்டும் அவளை எப்படி உணர்த்திவிட முடியும்!

இவ்வாறு சொல்லுக்கும் சிந்தைக்கும் அப்பாற்பட்டவளாகத் திகழ்பவள் **மனோ வாசாம் அகோசரா**.

***சித் சக்தி:*** - சித் சக்தி ஸ்வரூபமாக இருப்பவள்.

**சேதனாரூபா** - அசையும் பொருட்களின் வடிவம்.

***ஜட சக்தி:*** - கண்ணுக்குத் தெரியக்கூடிய பொருட்களின் சக்தியாக உறைபவள்.

**ஜடாத்மிகா** - அந்த ஜடப் பொருட்களின் உள்கிடக்கை - ஆத்மா - ஜீவன் அம்பிகைதான்.

**காயத்ரி** - காயத்ரி தேவியாக ஸ்வரூபமாக இருக்கக்கூடியவள். காயத்ரி மாதாவைப் பற்றி பல புராணங்கள் உண்டு. வேத மாதாவாக - 'காயத்ரி சந்தஸ்மாதா' - என்று போற்றப்படுபவள் காயத்ரி மாதா. சந்தஸ் என்று சொல்லப்படும் ஒலிக் கிரம வடிவங்களுக்கெல்லாம் தலையாய சந்தஸ், காயத்ரி சந்தஸ்தான். அந்த விசேஷமான காயத்ரி ஸ்வரூபமாக இருக்கக்கூடியவள் அம்பிகை.

**த்விஜ பிருந்த நிஷேவிதா** - த்விஜா என்றால் இரட்டைப் பிறப்பு. இரு பிறப்பாளர்கள் என்று சொல்வதுண்டு. உபநயனம் செய்யப்பட்டவர்களுக்கு த்விஜா என்றொரு பெயர் உண்டு. இங்கே, அவ்வாறு உபநயனம் செய்யப் பெற்றவர்கள் என்பது மட்டுமல்ல அர்த்தம். பகவானுக்கு வெகு அருகில் அழைத்துச் செல்லப்பட்டவர்கள் என்று பொருள். யாரெல்லாம் முறையாக உபதேசம் பெற்றிருக்கிறார்களோ, யாரெல்லாம் முறையாக பரபிரம்மத்துக்கு அருகே செல்கிறார்களோ அவர்கள் த்விஜர்கள். அத்தகையவர்களால் சேவிக்கப்படுகிறவள் - வணங்கப்படுகிறவள் - **த்விஜ பிருந்த நிஷேவிதா**. *(வளரும்)*

"ஒருவரின் உடம்பில் பஞ்சபூதங்களின் சக்தி சரிவிகிதத்தில் இருந்தால், அவரின் எண்ணங்கள் யாவும் பாஸிட்டிவ்வாகவே இருக்கும். அவை சரிவிகிதத்தில் இல்லாது போனால் எண்ணங்கள் நெகடிவ்வாகவே இருக்கும்'' என்கிறார் அக்குபஞ்சர் நிபுணர், சென்னை தியாகராய நகர் சந்தோஷி மெடிக்கல் ரிசர்ச் ஃபவுண்டேஷனின் தலைமை மருத்துவர் டாக்டர் எல். உமா வெங்கடேஷ்.



# பஞ்சபூத

"பாஸிட்டிவ், நெகடிவ் எண்ணங்களுக்கும் பஞ்சபூதங்களுக்கும் சம்பந்தம் இருக்கு. உயிர் உருவாவதற்கு, பஞ்சபூதங்களின் சக்தி அவசியமாகிறது. அப்படி உருவாகும் உயிர் அதே பஞ்சபூதங்களினால்தான் வாழமுடியும்.

ஒருவரின் உடம்பில் எண்ணிலடங்கா செல்கள் இருக்கின்றன. அத்தனை செல்களுக்கும் பஞ்சபூதங்களின் சக்தி கிடைத்து விட்டால், அவருக்கு உடல்ரீதியாகவோ மனரீதியாகவோ எந்தப் பிரச்னையும் இருக்காது.

ஒரு மனிதன் அவன் கொண்ட துர் எண்ணங்களினால்தான், கெட்டவன், குடிகாரன், திருடன்... என்றெல்லாம் அறியப்படுகிறான். அந்தத் துர் எண்ணங்கள் ஏற்படக் காரணம் அவன் உடம்பின் செல்களுக்கு, பஞ்சபூதங்களின் சக்தி சரிவிகிதத்தில் கிடைக்கவில்லை என்பதுதான். குறிப்பாக இதயத்துக்குத் தேவையான நெருப்பு சக்தி சரிவிகிதத்தில் கிடைக்காததே காரணம்.

இதயத்தின் சக்தி ஓட்டப்பாதையில் கோளாறு ஏற்படுவதால், நெருப்பு சக்தி இதயத்தை நெருங்க முடியாமல் போகிறது. தேவையான நெருப்பு சக்தி கிடைக்காவிட்டால் இதயம் சீர்குலையும்.

இதயத்தின் இயக்கம் சீர்குலைந்தால், உடல் உறுப்புகளிலிருந்து தோன்றும் உணர்ச்சிகள் பக்குவப்படாமல் இருக்கும். எதற்கும் உணர்ச்சிவசப்படுதல், கலக்கம், மனத்தடுமாற்றம் முதலானவை தோன்றும்.

இதயத்தின் செயல்பாடு மேலும் வலுவிழக்கும்போது பொய், பொறாமை, சூழ்ச்சி, பழிவாங்குதல், சூதாட்டம், குறுகிய வழிகளில் பணம் சம்பாதித்தல் போன்ற எண்ணங்கள் வரும். கெட்டது என்று தெரிந்தும் அதையே செய்ய வேண்டும் என்ற கட்டாயத்துக்கு மனநிலை மாறிவிடும்.

'ஒழுங்கா படிக்க மாட்டேங்கிறான், விழுந்து விழுந்து படிக்கிறான் மண்டையிலே ஏறவே மாட்டேங்

குது, பெத்த வங்க சொல்லைக் கேட் கவே மாட்டேங்குறான், கொஞ் சம்கூட கான்ஃபிடன்ஸ் இல்லை' என்றெல்லாம் தங்கள் குழந்தைகளைப் பெற்றோர்கள் திட்டிக்கொண்டிருப்பார்கள். அவர்கள் எல்லாரும் தங்களின் குழந்தை களுக்கு பஞ்சபூத சக்தி சரிவிகிதத்தில் இருக்கும்படி பார்த்துக்கொண்டால், எண் ணங்கள் ஷார்ப்பாக, ஃப்ரெஷ்ஷாக, பாஸிட் டிவ்வாக இருக்கும். மந்த புத்தி விலகி ஞாபகசக்தி அதிகமா கும்'' என்றவரிடம்,

''பஞ்சபூத சக்திகள் உடம்புக்குள் சரிவிகிதத் தில் இருக்கும்படி பார்த் துக்கொள்வது எப்படி?''

டாக்டர்
எல். உமா வெங்கடேஷ்



# மருத்துவம்!



என்று கேட்டால்,

''அக்குபஞ்சர் மருத்துவ முறை யின் மூலம் பஞ்சபூத சக்திகளைச் சரிவிகிதத்தில் பெற முடியும்.

ஒரே ஓர் ஊசி மூலம் உடம் பின் அனைத்துச் செல்களுக்கும் பஞ்சபூதங்களின் சக்திகளைச் செலுத்த முடியும்.

இந்த அக்குபஞ்சர் சிகிச்சைக்கு எந்தப் பத்தியமும் கிடையாது. பக்கவிளைவுகளும் கிடையாது.

வண்டிகளுக்கு சர்வீஸ் செய் வது மாதிரி குறிப்பிட்ட காலத்துக்கு ஒருமுறை இந்தச் சிகிச்சை எடுத்துக் கொள்ள வேண்டும்.

இந்தச் சிகிச்சை எடுத் துக்கொள்வதால் சித்தர்கள் வரையறுத்துள்ள 1436 வியாதி களில் இருந்தும் தப்பிக்கலாம்'' என் கிறார் டாக்டர் உமா வெங்கடேஷ்!

''இந்தச் சிகிச்சை மூலம், நெகடிவ் மனிதர்களை உடனடியாகத் திருத்திவிட முடியாது. கொஞ்சம் கொஞ்சமாகத்தான் திருத்த முடியும். ஆனால், அவர்கள் மேலும் மேலும் தீய வழிகளில் ஈடுபடா மல் செய்வது சாத்தியம்'' என்கிறார்.

''தீயவராக ஒருவர் உருவாகுவதையே தடுக்கலாம். 'எந்தக் குழந்தையும் நல்ல குழந்தைதான் மண்ணில் பிறக்கை யிலே. அது நல்லவர் ஆவதும் தீயவர் ஆவதும் அன்னை வளர்ப்பிலே' என்ற பாடல் வரிகள் சத்தியமானவை.

ஒவ்வொரு தாயும் தன் குழந்தைக்கு, குழந்தைப் பருவத்திலிருந்தே குறிப்பிட்ட காலத்துக்கு ஒருமுறை பஞ்ச சக்தி சிகிச்சை யளித்து வந்தால், நல்லவர்களாகவே வளர் வார்கள்; நல்லவர்களாகவே வாழ்வார் கள்'' என்கிறார் டாக்டர் உமா வெங் கடேஷ், ஊசி முனையளவும் சந்தேக மின்றி!

– கதிரவன்

# என்னை இயக்கிய ஹீரோக்கள் 17

## இயக்குநர் சிம்புதேவன்

**நா**ன் ஐந்தாவதுவரை மதுரை ஆர்.சி. பிரைமரி ஸ்கூலில் படித்துவிட்டு, அதன் பின் புனித பிரிட்டோ மேல்நிலைப் பள்ளியில் படித்தேன். இரண்டு பள்ளிகளும் அருகருகே இருந்தன. இரண்டும் ஒரே மேனேஜ்மெண்ட் என்றாலும், ஐந்தாவது முடித்து நுழைவுத்தேர்வு எழுதித்தான் பிரிட்டோ ஸ்கூலில் சேர முடியும். அந்தத் தேர்வு எழுதி, நான் ஆறாவது 'A' பிரிவுக்குப் போன முதல்நாள் காலை. எல்லா மாணவர்களும் முகத்தில் கலவரமும், பீதியுமாகக் காத்திருந்தோம். ஆசிரியர் இன்னும் வரவில்லை. இப்போது வரும் ஆசிரியர்தான் எட்டாவதுவரை ஆசிரியராக இருப்பார்! சீனியர்கள் கொடுத்த ஒற்றுச் செய்தியின் மூலம், அங்கு ஏற்கெனவே உள்ள விதவிதமான ஆசிரியர்கள் பற்றிக் கேள்விப்பட்டுள்ளோம். காதைத் திருகுபவர், பிரம்பு ஒடிந்து விழும்படி அடிப்பவர், மேலே பாய்ந்து குரல்வளையைக் கடிப்பவர், குடும்பத்தையே வரவழைத்து கும்மி எடுப்பவர் என, பல ரேஞ்ச் கோபக்கார ஆசிரியர்கள் உண்டு. இன்னொரு பக்கம் - பெஞ்சில் புத்தகங்களை அண்டக்கொடுத்து நாம் தூங்கினால்கூட கண்டுகொள்ளாத சாந்தசொரூபி ஆசிரியர்களும் உண்டு. நமக்கு என்ன மாதிரியான ஆசிரியரைக் கடவுள் அனுப்பப் போகிறார்? நம் மீது இரக்கப்படுவாரா? மாட்டாரா? முன்பு படித்த பள்ளியைவிட இது மூன்று மடங்கு பெரிது. அதுவே பாதிப்பேர் வயிற்றில் புளியைக் கரைத்தது. கடைசியில் கர்லிங் முடியோடு, கம்பீரமும், சாந்தமுமாக ஆசிரியர் உள்ளே நுழைந்தார். எல்லோரும் எழுந்து ஒரு கையை நெற்றியில் வைத்து கோரஸாக வணக்கம் சொன்னோம். தன் டேபிள் அருகே நின்றவர், ''என்ன நீங்க எல்லாரும் போலீஸா? அந்தத் தொழிலுக்கு அப்படி சல்யூட் பண்றது முறை. நீங்களும் அப்படியா வணக்கம் சொல்றது? என்னை மாதிரி சொல்லுங்க'' என்றவர், இரு கைகளையும் நெஞ்சருகே சேர்த்துக் கும்பிட்டு, ''இது மாதிரி கைகூப்பி மனசார உணர்ந்து 'வணக்கம்'னு சொல்லணும். படிப்பைவிட பண்புதான் முக்கியம்!'' என்றார். எல்லோரும் அதேபோல் சொன்னோம். எல்லோரையும் உட்காரச் சொன்னவர், எங்கள் அகத்தின் அழகு வெளிப்படுத்திய முகத்தின் பீதிகளைப் புரிந்துகொண்டு சிரித்த முகத்தோடு, ''யாரும்



● டேவிட் ராஜேந்திரன்

# தண்டவாளத்தில் ஓரும் பூமி!

பயப்பட வேண்டாம். என் பேர் டேவிட் ராஜேந்திரன். நான்தான் உங்க ஆசிரியர். நான் உங்க ஃப்ரண்டு மாதிரி! வாழ்க்கை நீளமானது. அதுல சில காலம் நாம சேர்ந்து இருக்கப் போறோம். நல்ல விஷயங்களைக் கத்துக்கப் போறோம். கண்டிப்பும் இருக்கும், சுதந்திரமும் இருக்கும். எல்லாம் நீங்க நல்லா வரணும்னுதான்! புரியுதா?'' என்றார். புரிந்தது... அவர் கோபக்காரரும் இல்லை. சாந்த சொரூபியும் இல்லை என்று.

**கா**லை, முதல் பாடவேளை தொடங்கும் முன் 'Our father in heaven' என்கிற



இறைவணக்கம் சொல்லுவோம். பொதுவாக எல்லோருக்கும் இறைவணக்கம் மனப்பாடமாக இருப்பதால், அதைக் காட்டுக் கத்தலாகக் கத்தி, நம் மனப்பாட சக்தியை அருகில் இருப்பவரிடம் திமிராகப் பகிர்ந்து கொள்வோம். அது மாணவ இயல்பு. ஒருநாள் இப்படி எல்லோரும் கத்தி முடித்ததும் டேவிட் ராஜேந்திரன் சார் டென்ஷனாகிவிட்டார். ''ஏன் இப்படி கத்துறீங்க? நீங்க இறைவணக்கம் ஆரம்பிச்சதும் கடவுள் ஓடிப்போய் தூண் பின்னால ஒளிஞ்சிருந்து, எப்படா முடிப்பாங்கன்னு எட்டிப்பார்க்கிற மாதிரியா பாடுறது?'' என்று கூறிவிட்டு சில வினாடிகள் யோசித்தவர், ''இதை விடக் கூடாது. போய் டீச்சர்ஸ் ரூமில் ஹார்மோனியம் இருக்கும். எடுத்துட்டு வாங்க!'' என இருவரை அனுப்பினார். முதல் தடவையாக ஹார்மோனியத்தை அருகில் பார்த்தேன். எல்லோரையும் சுற்றி வந்து நிற்கச் சொல்லிவிட்டு 'Our father in heaven' பத்து வரி பாடலுக்கு ட்யூன் போட ஆரம்பித்தார். பின்னாளில் இசையமைப்பாளர்கள் தேவா, பரத்வாஜ், சபேஷ்-முரளி, வித்யாசாகர் ஆகியோர் ட்யூன் போடுவதை அருகிலிருந்து பார்த்தாலும் - நான் முதலில் பார்த்தது டேவிட் ராஜேந்திரன் சார் ட்யூன் போட்டதைத்தான். அரைமணி நேரத்தில் ட்யூன் தயாரானது. 'இளையராஜாவின் 'காதல் ஓவியம்... பாடும் காவியம்...' டைப் ட்யூன். எல்லோருக்கும் சொல்லிக்

கொடுத்தார். மொத்த வகுப்பே சேர்ந்து கோரஸாகப் பாடியபோது, உடம்பு சிலிர்த்தது. டேவிட் சார் நல்ல கலை ரசனை உடையவர்; மிகச் சிறந்த இசையறிவு உடையவர் என அதன் பின்தான் தகவல் தெரிந்தது. மிகுந்த உற்சாகம் அடைந்தேன்.

**நா**ன் கிளாஸ் லீடராகவும் இருந்தேன். வகுப்பில் ஆசிரியர் இல்லாதபோது பேசி சேட்டை செய்பவர்களின் பெயர்களை, லீடர் போர்டில் (கரும்பலகை) எழுதி வைக்க வேண்டும். ஆசிரியர் வந்ததும் அவர்களைக் கூப்பிட்டு ஆளுக்கோர் அறை விடுவார்... இதுதான் முறை! ஒருதடவை நான் ஆர்வக் கோளாறில், சேட்டை செய்த மூன்று பேரின் பெயரை எழுதி அதைச் சுற்றிக் கவச குண்டலம் மாதிரி வரைந்து, அதை ஒட்டி இலை மாதிரி டிசைன் எல்லாம் வரைய டேவிட் சார் வந்துவிட்டார். போர்டைப் பார்த்தவர், ''திருட்டுப் பயக பேரை மட்டும் எழுதினா போதாதா? அதுக்கு இவ்வளவு டிஸைன் பண்ணணுமா?'' என என் தலையில் கொட்டியவர், ''ஆனா டிஸைன் நல்லா இருக்கே. இன்னும் பெரிசா வரை... பார்ப்போம்!'' என சேரைத் தூக்கிப் போட, நான் அதில் ஏறி போர்டில் வரைய ஆரம்பித்தேன். வரைந்து முடித்ததும், ''சூப்பர்! எல்லாரும் கை தட்டுங்க'' என்றதும் வகுப்பே கைதட்டியது. ''இந்த முறை இன்ஸ்பெக்ஷனுக்கு நீதான் போர்டை டிசைன் பண்ணி அலங்கரிக்கணும்!'' என்றார். பொதுவாக டிராயிங் மாஸ்டர்தான் எல்லா வகுப்புகளுக்கும் வரைவார். எனக்கான பெரிய வாய்ப்பு கிடைத்தது. அதற்குள் ஹெட்மாஸ்டர் யாகப்பனுக்கு இந்தத் தகவல் தெரிந்து, ''பசங்க எல்லாம் வரைய வேண்டாம். டிராயிங் மாஸ்டரே வரையட்டும்!'' எனச் சொல்லியுள்ளார். உடனே டேவிட் சார் என்னை ஹெட்மாஸ்டர் ரூமுக்கு கூட்டிச் சென்று, ''இந்தப் பையன் மேல எனக்கு நம்பிக்கையிருக்கு. வரைஞ்சு காட்டு!'' என்றார். நான் எதிரே இருந்த போர்டில் வரைந்தேன். பிறகு ஹெட்மாஸ்டர் 'ஒ.கே' சொல்ல, டிராயிங் மாஸ்டரே பாராட்டும்படி எங்கள் போர்டில் வரைந்தேன். இன்ஸ்பெக்ஷன் வந்த அதிகாரியிடம் டேவிட் சார், ''இவன்தான் போர்டை டிசைன் பண்ணினான்'' என என்னை அறிமுகப்படுத்தினார். தொடர்ந்த வருடங்களில் நான்தான் போர்டில் வரைந்தேன். என் முதல் அங்கீகாரத்தை ஏற்படுத்தித் தந்தவர் எனது டேவிட் சார்.

**''எழுதறதுல ஆர்வம் இருக்கறவனுக்கு, முதல்ல விஷயம் தெரிஞ்சுக்கிறதுல ஆர்வம் வேணும். நிறைய தெரிஞ்சுக்கிட்டு கொஞ்சமா எழுதுங்க.''**

**ஏ**ழாவது படிக்கும்போது சுஜாதா கதைகளின் பாதிப்பில், நானும் சுஜாதா போல் சயின்ஸ் ஃபிக்ஷன் சிறுகதை எழுதி டேவிட் சாரிடம் காண்பித்தேன். அதன் கிளைமாக்ஸில் பூமி தன்னுடைய வட்டப்பாதையில் இருந்து விலகி உருண்டு போய் சூரியனில் விழுகிறது என எழுதியிருந்தேன். அவர் படித்து முடித்துவிட்டு ''பூமி ஏன் உருண்டு போகுது?'' என்றார். ''வட்டப்பாதையை விட்டு விலகிருச்சுல்ல. அப்ப கடகடனு உருண்டுரும்ல!'' என்றேன். ஓங்கி முதுகில் போட்டார்! ''ஏண்டா அங்க என்ன தண்டவாளம் போட்டு அதில் பூமி ஓடுதுன்னு நெனைச்சியா? சயின்ஸ் தெரியாமல் சயின்ஸ் ஃபிக்ஷன் எழுதுறான்.... ராஸ்கல்!'' என்றவர் யுனிவர்ஸ், கேலக்ஸி பற்றி




விளக்கமாக எடுத்துச் சொன்னார். ''எழுதறதுல ஆர்வம் இருக்கறவனுக்கு முதல்ல விஷயம் தெரிஞ்சுக்கிறதுல ஆர்வம் வேணும். நெறைய தெரிஞ்சுக்கிட்டுக் கொஞ்சமா எழுது!'' என்றவர், அவர் எழுதிய ரேடியோ நாடகத்தைக் கொடுத்து, படிக்கச் சொன்னார். பள்ளி ஆண்டு விழாவில் அவரும், அமலொர்பமும் சேர்ந்து போடும் நாடகம் மிகப் பிரமாதமாக இருக்கும். நானும் சின்ன கேரக்டர்களில் நடித்திருக்கிறேன்.

அவரால் மாவட்ட அளவில் ஓவியத்தில் பல பரிசுகள் பெற்றேன். எனக்கு மட்டுமல்ல பலருக்கும் அவர் தூண்டுகோல். நண்பன் ஜெய்கணேஷ் எழுதிய கவிதைகளைத் திருத்தி எழுதச் சொல்லித் தருவார். நன்கு டான்ஸ் ஆடும் வில்விஜயனுக்கு மாலை நேரங்களில் டான்ஸ் சொல்லித் தருவார். பாட்டு சொல்லித் தருவார்; நல்ல ஆங்கிலப் படங்களைப் பார்த்துவிட்டு வந்து, ஸீன் பை ஸீனாக எல்லோருக்கும் கதை கூறி உத்வேகப்படுத்துவார். ஒரு முறை கணக்கில் நான் மிகக் குறைந்த மார்க் எடுத்து விட்டேன். அவர் என்னைக் கூப்பிட்டு அடிக்கவில்லை. ''நீ நல்ல வரையுற... எழுதற... சந்தோஷம்! ஆனா அதுக்கு இணையா படிக்கணும். அதுதான் பேஸ்மெண்ட். படிப்பு நல்லா இருந்தாதான் உன் கலை ரெண்டு மடங்கு மேலே போகும்!'' என்று உணர்த்தினார்.

தவிர மரியாதைக்குரிய ஆசிரியர்களான எம்.சேவியர், எல்.சேவியர், ஜேம்ஸ் ஸ்டீஃபன், மைக்கேல் ஃபிரான்ஸிஸ், சூசையருள் போன்றவர்கள் அற்புதமாக எங்களை ஆற்றுப்படுத்தினார்கள். வாழ்க்கையும், கலையும் புரியும் பருவத்தில் டேவிட் சாரும், புனித பிரிட்டோ மேல்நிலைப் பள்ளியும் எனக்குக் கொடுத்தவை ஏராளம்.

'இம்சை அரசன் 23-ம் புலிகேசி', 'அறை எண் 305-ல் கடவுள்' மூலம் நான் இயக்குநர் ஆக, இவர்களும் காரணம்.

*(பேசுவோம்)*



ரேஷன் கடை பொருட்களில் முதல்வரின் படம் அச்சிடுவது குறித்த தராசுவின் பதில் கல்கியின் தரத்துக்கு ஏற்றதல்ல.

- பாரதி,
சென்னை - 28

# நச்சென்று ஒரு

மார்ட்டின் லூதர் கிங் அஸ்திவாரம் போட்டதாகக் காட்டிய கார்ட்டூனும், தலையங்கமும் சூப்பர்தான்!

- எம். அசோக்ராஜா,
அரவக்குறிச்சிபட்டி

ஒருகாலத்தில் சன் டீ.வி.யில் நுழையக்கூட முடியாத ராதிகா, இன்று சன் டீ.வி. சீரியல்களுக்கே 'அரசி' ஆனது. நல்ல எடுத்துக்காட்டு!

- கிருஷ்ணகுமார்,
திருவாரூர்

'சேவல்' பட விமர்சனம் நச். பாராட்ட வேண்டிய இடங்களில் பாராட்டி, குட்ட வேண்டிய இடங்களில் நச்சென்று குட்டி விட்டீரே!

- என். காளிதாஸ்,
சிதம்பரம்

கல்லூரிச் சாலையில், ஃபேஷன் ப்ளாஸா மாணவ மாணவிகளின் குறும்பு கள் படு அசத்தல்.

- ஏ.பி.எஸ். ரவீந்திரன்,
நாகர்கோவில்.

'குட் கான்டெக்ட் கும்ப்ளே' ஜம்போ என்று செல்லமாக சக ஆட்டக்காரர்களால் அழைக்கப்பட்டாலும், களத்தில் இறங்கி விட்டால் நிஜ ஜம்போதான்.

- பி. ராகவன், சென்னை - 44

எந்த விஷயத்தைக் குறித்தும் அபிப்பிராயங்களைக்கூட நடுத்தரவர்க் கத்தினர் உருவாக்கிக்கொள்ள மாட்டார்கள் என்ற மாலனின் 'நடுவர்கள்' சிறுகதை, உண்மையிலேயே சிறப்புச் சிறுகதை!

- எஸ். முரளி,
ஸ்ரீரங்கம்

வேலையில் மாற்றலாகி வருபவர் களுக்கு தபால் இலாகா அறிமுகப்படுத்தும் அடையாள அட்டை, பேருதவியாக இருக்கும்!

- சாந்தா ராஜாமணி,
சென்னை - 88

பதில் அழகிய கவிதை.

- வி.என். கதிர்வேல்,
வேலூர் - 6

'நீதி கிடையாது; சட்டம்தான் உண்டு' என்பதை அமரர் கல்கி, சட்டம் ஒரு கழுதை தலைப்பில் உதாரணங்களுடன் விளக்கி யுள்ளது சிரிப்பை வரவழைத்தது!

- கே.வி.ராமன், சேலையூர்

கொஞ்சம் பலகீனமாக உணரும் போது ஒரு குளுக்கோஸ் பாட்டில் ஏற்றிக் கொள்வது தவறு என்று புரியவைத்தார் மனநல மருத்துவர் ஆனந்தன்.

- உமா மோகன்தாஸ்,
திண்டுக்கல்

ஹிந்துக்களின் தரப்பு நியாயங்களைப் பற்றிப் பேச ஹிந்துக்களே முன்வரத் தயங்கும் இந்தக் காலத்தில், உண்மைக்காக தயங்காமல் குரல்கொடுக்கும் ஃப்ரான்காய்ஸ் க்யாடியரை இருகரம் கூப்பி வணங்க லாம்.

# குட்டு! வட்டமேஜை

- கிணிஹரி, சென்னை - 4.

மாடலிங் துறையில் நுழைந்து, பிரகாசிக்கத் துடிக்கும் அம்மணிகளுக்கு நந்தினியின் டிப்ஸ் வரப்பிரசாதம்.

- என். பாலகிருஷ்ணன், மதுரை

'சினி சிப்ஸ்' நான்கும் நல்ல மொறுமொறு சிப்ஸ்ங்க!

- கே. கஸ்தூரி, வேலூர்

''அழகுக்காக ஒருத்தி காதலிக் கப்படுவதில்லை; காதலிக்கப்படுவதால் அவள் அழகியாகிறாள்'' - கிரேஸியின்

தமிழ் இனம் இலங்கையில் அழிந்து விடும் என்ற இலங்கை தமிழ் எம்.பி.யின் கருத்து கவலைக்குரிய ஒன்றுதான்.

- எம். அசோக்ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி

சீதா ரவியின் சர்ப்ரைஸ் மினி தொடர் திகிலுடன் முடிகிறது. சர்... சர்... என பறக் கும் தொடரின் முடிவில் ஒரு வாசகருக்கு 'ப்ரைஸ்' வைக்கலாமே!

- எஸ். அமிர்தா சௌந்தர்,
சென்னை - 26

மேஷம் : அல்வாப்பேட்டை பெனிஃபிட் ஃபண்டு போன்ற நிதி நிறுவனங்களால், எளிதில் ஏமாற்றப்பட்டுவிடும் அப்பாவி மேஷ ராசி அன்பர்களே, ரிசர்வ் வங்கி சமேதராக அரசாங்கமே நடத்தும் வங்கியில் உள்ள உங்கள் சேமிப்பு, பாதுகாப்புடன் இருக்குமா என்று சஞ்சலப்படுவீர்கள். உலகளவில் நஷ்டமான பில்லியன், மில்லியன்களெல்லாம் (1) எங்கே இருந்தன (2) இப்போது எங்கே போயிற்று என்கிற விவகாரங்களெல்லாம் பிரும்ம சூத்திரம் மாதிரி; புரியாது. அவற்றைப் புரிந்துகொள்ள முயலாதீர்கள். தலைமுடி நரைக்காமலேயே கொட்டிவிடும்.

பரிகாரம் : உங்கள் வங்கியைக் காக்க, வெள்ளியால் செய்த வங்கியை, குலதெய்வக் கோயிலின் உண்டியில் சேர்த்துவிட்டு, 'காக்க, காக்க' என்று ஜெபித்துவிட்டு கன்னத்தில் போட்டுக்கொள்வது நலம். 'நிதி சால சுகமா?' என்கிற தியாகய்யரின் கீர்த்தனையைப் பாடி வந்தால் மனச்சுமை குறையும்.

ரிஷபம் : பல் தேய்த்து முடித்த கையோடு, வர்த்தகச் செய்தித்தாளை அலச ஆரம்பிக்கும் ரிஷப ராசி முதலீட்டு மன்னர்களே! 'எப்படி இருந்த நான் இப்படி ஆயிட்டேன்?' என்கிற பஞ்ச் டயலாக்குடன் சரிந்துவரும் ஸென்ஸெக்ஸ், உங்களை மிரள வைக்கும். பணத்தை டிமேட் அக்கௌன்ட்டு மூலமாக, பங்குகளாக வாங்கி - விற்றுப்



**ஜே.எஸ். ரகவன்**

**ஜாலி ஸ்டோர்ஸ்**

பயன் அடைந்த இந்த ராசி இல்லத்தரசிகள், பணத்தை அஞ்சறைப் பெட்டியிலோ அல்லது பீரோவில் பட்டுப் புடைவைகள் இடையிலே பாச்சை உருண்டைகளோடோ ஒளித்துவைத்திருக்கலாம். பெருங்காய டப்பியாக இருக்கும் பணப் பெட்டியைப் பார்த்து பெருமூச்சுவிடாமல், உண்டியில் சேர்க்கத் துவங்கவும். உண்டி சுருங்குதல் பெண்டிற்கு அழகல்ல! விருந்தாளிகளை வரவழைக்காமல் விருந்தாளிகளாக பிற இடங்களுக்குச் சென்று செலவைக் குறைப்பது உத்தமம்.

**பரிகாரம் :** ஷேர் சம்பந்தமான விஷயங்களை, குறிப்பாக ஷேர் ஆட்டோக்களைக் கூடத் தவிர்ப்பது நலம். இன்வெஸ்ட்மெண்ட் அல்லது போர்ட்ஃபோலியோ மேனேஜ்மெண்ட் வித்தகர்களைக் கண்டால் பக்கத்துச் சந்தில் ஒளிந்துகொள்ளவும். விடியற்காலையில் டில்லி திக்கை நோக்கி நின்று, 'சிதம்பர நாதா திருவருள் தா... தா...' என்கிற சிவன் பாடலை மனமுருகப் பாடி வரவும்.

**மிதுனம் :** ஷேர் மார்க்கெட், மியூச்சுவல் ஃபண்டு போன்ற பொருளாதாரக் காற்றாடி விடும் சமாச்சாரங்களில் நம்பிக்கை வைக்காத மிதுன ராசி அன்பர்களே, நீங்கள் வாங்கிய தங்க டாலர்கள், நாணயங்கள், பிஸ்கெட்டுகள், 'பார்த்தியா?' என்று பெருமையுடன் உங்களைப் பார்த்துக் கண்சிமிட்டும். தங்கத்தைக் கம்பியாக நீட்ட முடியும் என்பதால், உங்கள் தங்கத்துடன் கள்வர்கள் கம்பி நீட்டாமல் பார்த்துக் கொள்ளவும். பணத்தை விதைகளாக நிலத்தில் முதலீடு செய்தவர்கள், மேலேயும் போகாமல் கீழேயும் இறங்காமல் திரிசங்காக நிலங்களின் மதிப்பில் தேக்கம் இருக்கும் நிலைகண்டு அஞ்சக்கூடும். அடுத்த பத்து ஆண்டுகளில் வரவிருக்கும் பைபாஸ், மேம்பாலம், சுரங்கப் பாதை, சாலை விஸ்தரிப்பு, மெட்ரோ ரயில், மாடி ரயில், பறக்கும் ரயில், அணு உலைகளால் உங்கள் மனைகள் அடிமாட்டு விலைக்கு ஆர்ஜிதம் செய்யப்படாமல் இருக்க, அவை பற்றிய செய்திகளைத் தேடிப் பிடித்து முன் எச்சரிக்கையுடன் செயல்படவும்.

**பரிகாரம் :** பொன் அகப்பட்டாலும் அகப்படாத புதன் கிழமைகளில் வேலூர் தங்கக் கோயிலுக்குச் சென்று வரவும். பில்லியன், மில்லியன்களைப் பற்றிக் கவலைப்படாமல் 'புல்லியனி'ல் தொடர்ந்து முதலீடு செய்து வரவும்.

**துலாம் :** ஆறு இலக்க சம்பளம் வாங்கிக்கொண்டிருக்கும் துலா ராசிக்காரர்களே, யுவராஜ் சிங் 20-20 மேட்சில் அடிக்கும் சிக்ஸர் போல உங்கள் சம்பளம் இனி மேலே மேலே உயருமா என்று கவலைப்படாமல், ஊத ஊதப் பெருசாகும் பலூன் ஒருநாள் வெடிக்கும் என்பதை மனத்தில் கொள்ளவும். 'இந்தியனே வெளியேறு' என்கிற அமெரிக்காவின் அறைகூவலினால் வந்து கொண்டிருக்கும் சிலரைப் பார்த்து அமைதி அடைவது உத்தமம். நீண்ட லீவில் போகாமல் அலுவலகங்களுக்குச் சென்று வருவது நலம்.

(மேற்கண்ட ஜோதிடக் குறிப்புகளை வழங்கிய ஜோதிட சாம்ராட் சோழியூர் ஜெயராமன், தன்னுடைய ராசியின் பலனைக் கணிக்கும்போது மனம் தளர்ந்து போனதால், தொடர்ந்து அவரால் எழுத முடியவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறோம்.)

**முதலீடு!**

# சினி சிப்ஸ்

'சன் நெட் ஒர்க் குருப்' சினிமா தயாரிப்பில் குதித்திருப்பது அனைவரும் அறிந்ததே. சும்மா இருப்பாரா அழகிரி? தனது மகன் 'தயாநிதி அழகிரி'யை, தயாரிப்புக் களத்தில் இறக்கி விட்டிருக்கிறார். முதல் முயற்சியாக கௌதம் வாசுதேவ் மேனன் இயக்கி, சூர்யா ஐந்து வேடத்தில் நடித்திருக்கும் 'வாரணம் ஆயிரம்' படத்தை மொத்தமாக வாங்கியிருக்கிறார். (அப்ப உதயநிதிக்கும், செக், தயாநிதிக்கும் செக். ஒரே கல்லில் ரெண்டு மாங்காய்!)

'குற்றப் பரம்பரை எனது கனவுப் படம். நான் சினிமாவில் ஏதாவது சாதித்தால் அது குற்றப்பரம்பரை படம்தான்' என்று சொல்லி இருந்தார் இயக்குநர் பாரதி ராஜா. இப்போது அதேபெயரில் மக்கள் டி.வி.க்காக ஒரு தொடரை இயக்கவுள்ளாராம் இயக்குநர் செய்யாறு இரவி. எழுத்தாளர் வேல. ராமமூர்த்தியின் கட்டுரைகளை அடிப் படையாகக் கொண்டு வெளிவரவிருக்கும் இத்தொடருக் காக, தான் இயக்கி வந்த 'ஆனந்தம்' தொடரிலிருந்து விலகவும் முடிவு செய்திருக்கிறாராம். (என் இனிய தமிழ் மக்களே என்று ஆரம்பிக்காமலிருந்தால் சரி...)

முழுக்க முழுக்க ஆன்மிகத்துக்கு என்றே ஒரு சேனல் வரப் போகிறது. 'சங்கரா டீ.வி.' என்ற பெயரில் இந்த மாத இறுதியில் ஒளிபரப்பைத் தொடங்கப் போகும் இந்தச் சேனலின் பின்னணி யில் காஞ்சி மடம் இருக்கிறது என்கிறது தகவல்.



தமிழ் கஜினியை இந்தியில் ஆமிர்கான், அசின் நடிக்க இயக் குநர் ஏ.ஆர்.முருகதாஸ் இயக்குகிறார். படத்தின் மொத்த ஷூட்டிங்கும் ஏறக்குறைய முடிந்துவிட்ட நிலை யில், படத்தைப் பார்த்த ஆமிர் கானுக்கு திருப்தி இல்லை யாம். சில காட்சிகளை மறு படியும் எடுக்கத் திட்டமிட் டுள்ளாராம். ('தமிழ்' கொடுமை தாங்க முடியாம இந்திக்குப் போனா, அங்கேயும் கொடுமை ஜிங்கு ஜிங்கு-னு ஆடுதோ?)

நியூஸ் பாய்

